# அன்னை மீனாட்சி அந்தாதி

''பல்துறைச் செந்நாப் பாவலர்''

''கவிஞர் கோ''

''உலகம் சுற்றும் பொற்கிழிக் கவிஞர்''

**அரு. சோமசுந்தரன்**, M. A., B. T.,

காரைக்குடி.



பொன்முடி : 76
உரிமை : ஆசிரியருக்கே
முதற் பதிப்பு : 1979 பிப்ரவரி
விலை ரூ. 3-50



Publishers :
**Ponmudi Pathippagam**
123, Muthupatnam III St.,
Karaikudi, Rd.Dt.,
Tamil Nadu

அச்சிட்டோர் :
லதா பிரிண்டர்ஸ்,
125-A, பாலஸ் ரோடு,
மதுரை-1
போன்-31929



# முன்னுரை

என்னை ஈன்றெடுத்த தாயின் பெயர் மீனுட்சி. என்னுடைய பதினுருவது வயதுத் தொடக்கத்திலேயே நான் என் தாயை இழந்தவன். எத்தனையோ இன்னல்களுக்கு இடையே, கொடிய வறுமைச் சூழ்நிலையில் பொறுமையோடும் பொறுப்போடும் எங்களை வளர்த்து, அறிவூட்டி, ஆளாக்கிய அந்தத் தாய் இன்று இல்லை. ஆனுல் அவள் எங்கள் நெஞ்சக் கோவிலில் நிலையாகக் கொலுவிருக்கிருள்.

மதுரை மீனுட்சியிடம் நான் எல்லையற்ற ஈடுபாடு உடையவன். மதுரை நகரில் நான் கால் வைத்தால் மீனுட்சியை வணங்காமல் வருவதில்லை. 1973-ஆம் ஆண்டில் தமிழக அரசின் சார்பில் மதுரை மீனுட்சி அம்மன் கோயிலார் ''பொற்கிழிக் காவியப் பரிசுப் போட்டி'' அறிவித்த பொழுது அதில் மகிழ்ச்சியோடு பங்கு பெற்றேன். மங்கையர்க்கரசியாரின்சரித்திரத்தைப் ''பாண்டிமாதேவி' என்னும் தலைப்பில் காவியமாக எழுதினேன். அப்பொழுது அக்காவியத் தலைவி மங்கையர்க்கரசியாரும், காவியத் தெய்வம் மதுரை மீனுட்சியும் என்

தாயின் உருவத்தில் கண் எதிரே காட்சி அளிக்கக் கண்டேன். அதனால் என்னை மறந்து அக்காவியத்தை மூன்றே நாளில் எழுதிப் போட்டிக்குஅனுப்பினேன். முதற் பரிசாகிய ரூபாய் ஆயிரம் கொண்ட பொற் கிழி தமிழக முதலமைச்சர் அவர்களால் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலில் நடத்தப் பெற்ற மாபெரும் விழாவில் அடியேனுக்கு வழங்கப்பெற் றது. எல்லாம் மதுரை மீனாட்சியின் அருளே!

மதுரை மீனாட்சியையும், என் அன்னை மீனாட்சி யையும் நான் ஒருவராகவே காண்கிறேன். ஆகவே என்னை மறந்து இந்த அந்தாதிப் பாடல்களை இயற்றி உள்ளேன். இதில் உள்ள சில பாடல்களில் இருவருக்கும் உள்ள சில ஒப்புமைகள் இயல்பாக வெளிப்படுகின்றன.

எல்லையற்ற பரம்பொருளாகிய பராசக்தியின் உணர்வில் தோய்ந்து இந்தப் பாடல்களை எழுதத் தொடங்கியது அவளது அருட் கட்டளையின்விளைவே ஆகும். ''என்னைப் பாடு'' என்றாள். பாடத் தொடங்கினேன். ஆனால் தொடர்ந்து எழுத முடிய வில்லை. மூல பவுத்திர நோயால் தாக்குண்டு பெருந் தொல்லைகளுக்கு ஆளாகினேன். 17–1–1979 அன்று நிலக்கோட்டை மருத்துவரால் அறுவைச் சிகிச்சை செய்யப் பெற்று, பவுத்திர நோயின் வேர் கள் மூன்று ஊதி எடுக்கப் பெற்ற பின் படுக்கையில் இருந்த நேரத்தில் இந்தப் பாடல்களைத் தொடர்ந்து எழுதினேன். ஆகவே நோயின் கொடுமைகள் இப் பாடலில் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன.

கவிஞன் காட்சியில் பரம்பொருள் இருந்தாலும், கருத்துக்களில் அவனது அனுபவமே இடம் பெறும். ஆகவே காலம் கடந்த நம்அன்னை மீனாட்சியை நான் பெற்ற அனுபவங்களோடு குழைத்துக் கொடுத்துள்ளேன். நர முயற்சி! எத்தனையோ குற்றம்குறைகள் இருக்கலாம். நம் தாய் அவற்றைப் பொருட்படுத்த மாட்டாள்.

எழுத்துலகில் எத்தனையோ போராட்டங்களுக்கிடையே என்னையும்காத்துக்கொண்டு எழுத்தையும் காத்துக்கொண்டு வருகிறேன் தமிழ் நாட்டில் ஒருவன் தொடர்ந்து எழுதுவது என்பது மலையை அசைக்கும் பணியாகும். மலை அசையவில்லை. நான் அசைகிறேன். நடப்பது நடக்கட்டும்.

1978 ஆம் ஆண்டில் அடியேனின் நாற்பத்திரண்டாம் வயது நிகழ்ந்தது. அது என் ஆயுளில் ஒரு கண்டமான காலம் என்பதனை என்னுடைய முப்பத்தெட்டாம் வயதிலேயே ஒரு கனவின் மூலம் அறிந்தேன். அதனைத் தொடர்ந்து பல கனவுகள் கண்டேன். அவை பலித்தன. அது போல் ''ஆயுள் கனவும்'' பலிக்கலாகாது என்று எண்ணினேன். "மனித்தப் பிறவியும் வேண்டுவதே" என்ற அப்பரின் ஆசை அடியேனுக்கும் ஏற்பட்டதில் வியப்பில்லை. வாழ விரும்பியதற்குக்காரணம் தோள்மேல் இருந்த பொறுப்புக்களும் தமிழ்மேல் இருந்த ஆசையுமே ஆகும்.

கண்டத்தைக்கடக்க எனது நாற்பத்திரண்டாம் வயதில் நானும் என்மனைவியும் முருகப்பெருமானின்

ஆறுபடை வீடுகளாகிய திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழநி, சுவாமிமலை, திருத்தணி, பழமுதிர் சோலை ஆகிய தலங்களுக்குத் தேவகோட்டையில் இருந்து சுமார் ஆயிரம் மைல் பாதயாத்திரையாகச் சென்று வழிபட்டுவந்தோம். அன்பர் ஒருவர்காவடி எடுத்து வந்து முருகனுக்குச்செலுத்த, மேலும் சில அன்பர்கள் எங்களோடு நடந்து வந்தனர். ஆயுள் நீட்டிப்புக்கு முருகப் பெருமானிடம் பிரார்த்தித்தேன்.

இதே காலத்தில், திருவாரூரில் சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்து, மறைந்து, கோயில் கொண்டுள்ள ஸ்ரீகுருதட்சணாமூர்த்திமீது "பிள்ளைத் தமிழ்" எழுதி 4–9–1978 அன்று வெளியிட்டேன். ஸ்ரீ குருதட்சணாமூர்த்தி சுவாமிகள் நோய் தீர்க்கும் பெருமான் ஆவார்.

என்னுடைய பிரார்த்தனை நிறைவேறியது. முருகப் பெருமான் அருளால் ஆயுள் நீட்டிப்புக் கிடைத்தது. ஸ்ரீ குருதட்சணாமூர்த்தி சுவாமிகள் அருளால் நோய் நீங்கியது. அன்னை மீனாட்சி ஆணையின்படி இந்நூலை எழுதி வெளியிடுகிறேன். அவள் அருளால் விரைவில் முழுநலம் பெறுவேன். அன்னை மீனாட்சியின் திருவடிகளில் இந்த எளிய அந்தாதியினைப் பணிவோடு படைக்கிறேன்.

123, முத்துப்பட்டணம்
மூன்றாம் தெரு,
காரைக்குடி

அன்புசால்,
**அரு. சோமசுந்தரன்**
(அருசோ)
27–1–1979

# கவிஞர் அரு. சோமசுந்தரன் வாழ்க்கைக் குறிப்பு

**ஈன்ற தாய்:** *மீனுட்சி.* **தந்தை:** *முத்துராமன்*

**பிறந்தவூர்:** புதுவயல். *(இராமநாதபுரம். மாவட்டம்)*

**பிறந்த தேதி:** *14-8-1936.* *தாது ஆடிமுப்பது. புனர்பூச நட்சத்திரம். மிதுனராசி கடக லக்கினம்*

**வளர்ப்புத் தாய்:** வள்ளியம்மை.

**தந்தை:** *அருணுசலம்.*

**பிள்ளை வளரச் சென்ற ஊர்:** தேவகோட்டை.

**பிள்ளை வளரச் சென்ற தேதி:** *5–5–1953*

**உடன பிறந்தோர்:** நால்வர், *1)* தமக்கை சோலை

தம்பியர்: *1)* ஆண்டான். *2)* இராசகோபால். *3)* மெய்யப்பன்.

**திருமணம்:** *1954 மே 4.* **மனைவி பெயர்** *நீலா.*

**குழந்தைகள:** பொன்முடி, இளவெயினி மங்கையர்க்கரசி மீனுட்சி எனும் புதல்வியர் மூவர்.

**படித்த பள்ளி:** தொடக்கக் கல்வி

ஸ்ரீ சரசுவதி வித்தியாசாலை. புதுவயல்

உயர்நிலைப் பள்ளிக் கல்வி: சிட்டாளாச்சி உயர்நிலைப் பள்ளி, கண்டனூார்.

கல்லூரிக் கல்வி; அழகப்பா கல்லூரி; காரைக்குடி

பயிற்சிக் கல்வி: அரசினர் பயிற்சிக்கல்லூரி.(B. T) குமாரபாளையம். சேலம் மாவட்டம்.

**ரிதஆத்தவள்ளல்:** கண்டனூர் வீ.தெ. வீரப்ப செட்டியார்

**கவிதைத் தொடக்கம்:** 1953 ஆம் ஆண்டில் பள்ளி இறுதி வகுப்பில் படித்த பொழுது கவிஞர் தனது முதல் கவிதையினைத் தன்னை ஆதரித்த வள்ளல் பற்றி இயற்றினார்.

**தேர்ச்சி:** 1957 மார்ச் பி. ஏ. தேர்வில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் மாநிலத்திலேயே முதல் மாணவராகத் தேறி ''ஜி. யு. போப் தங்கப் பதக்கம்'' பரிசினை மத்திய பாதுகாப்பு அமைச்சர் திரு. வி. கே. கிருஷ்ணமேனனிடம் இருந்து பெற்றார். 1963 ஏப்ரலில் தமிழில் எம். ஏ. தேர்வு தனியாகப் படித்து எழுதி மாநில இரண்டாம் பரிசு பெற்றார்.

**பணி:** 1957 ஆம் ஆண்டில் மதுரை 'தமிழ்நாடு' பத்திரிகையில் சில மாதங்கள் துணை ஆசிரிய ராகவும், 1958 ஆம் ஆண்டில் மதுரையில் ''பாங்க் ஆப் மதுரை'' நிறுவனத்தில் எழுத் தாளராகவும் பணி-1959 ஜுன் முதல் நான்கு ஆண்டுகள் திருவாரூரிலும், தேவகோட்டை யிலும் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் பணி-1963 ஜுலை முதல் நான்கு ஆண்டுகள் சண்முகநாத புரத்தில் உயர்நிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர் பணி-1967 ஜுன்முதல் காரைக்குடி ''செட்டி நாடு தனிப் பயிற்சிக்கல்லூரி'' முதல்வர் பணி

1974 முதல் நாடெங்கும் கதாகாலட் சேபம் செய்து வருகிறார்.

**சிறப்புப் பட்டங்கள்:**

1) 1-8-1966 அன்று கவிஞரின் முப்பதாவது பிறந்த நாளை ஒட்டிக் குன்றக்குடியில் நடந்த விழாவில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களால் கோயிலூர் வேதாந்த சபையின் சார்பில் ''பல்துறைச் செந்நாப் பாவலர்'' என்னும்பட்டம் கவிஞருக்கு வழங்கப்பெற்றது.

2) 24-4-1972 அன்று பறம்புமலைப்பாரி விழாவில் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களால் ''கவிஞர் கோ'' எனும் பட்டம் கவிஞருக்கு வழங்கப் பெற்றது. தமிழக முதலமைச்சர் திரு. கலைஞர் மு. கருணாநிதி கவிஞருக்குப் பொன்னாடை போர்த்தினர். தமிழகத் திரைப் படப்பிரிவு திரைப்படம்எடுத்து வெளியிட்டது.

3) தமிழக அரசின் சார்பில் மதுரை ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோயிலார் 1973 ஆம் ஆண்டு மே மாதத்தில் நடத்திய பொற்கிழிக் காவியப் போட்டியில்பங்குபெற்றுப்''பாண்டிமாதேவி'' காவியம் எழுதி முதல் பரிசாகிய பொற்கிழி பெற்று, இருபதாம் நூற்றாண்டில் முதற் பொற்கிழிக் கவிஞர் ஆனார். மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. டாக்டர் மு. வரதராசன் தலைமையில் தமிழக முதலமைச்சர் திரு. கலைஞர் மு. கருணாநிதி, மதுரை

ஆலயத்தில் கவிஞருக்கு ரூ 1001/-பொற்கிழி வழங்கினர்- தமிழக அமைச்சர்கள் பலரும், அறநிலேயத்துறை ஆணையர் திரு கே. எஸ். நரசிம்மனும் பாராட்டினர்-தமிழகத் திரைப் படம் வெளியீடு.

**புத்தகவெளியீடும் பொன்னுடையும்:**

கவிதை, காவியம், கட்டுரை, நாடகம், பயணம், இலக்கியத் திறனுய்வு, மொழி பெயர்ப்பு, வாழ்க்கை வரலாறு, சரித்திரம் முதலிய பலதுறை பற்றி இதுவரை 66 நூல்கள் கவிஞரால் எழுதி வெளியிடப் பெற்றுள்ளன. 5000க்குமேற்பட்ட கவிதைகள் 17தொகுப்புக் களாக வெளிவந்துள்ளன.

கவிஞரின் முதல் கவிதைத் தொகுப்பினை 29-11-1962 அன்று தமிழக நிதி அமைச்சர் திரு.சி. சுப்பிரமணியன் அவர்கள் சென்னையில் செயின்ட் மேரி மண்டபத்தில் நடந்த மாபெரும் விழாவில் வெளியிட்டார். ''கவிஞர் சோமசுந்தரன் வான் மழை போலக்கவிதை பொழிகிருர். மின்னல் கீற்றுப் போல ஒளி வீசுகிருர்'' என்று திரு. சி. எஸ். பாராட்டினுர். அவ்விழாவில் செட்டி நாட்டு அரசர் திரு. டாக்டர் முத்தையா செட்டியார் தலைமை தாங்கிக் கவிஞருக்குப் பொன்னுடை போர்த்தினுர். பேராசிரியர் திரு டாக்டர் அ. சிதம்பரநாதன், கி. வா. ஜகந்நாதன், தமிழ்வாணன் முதலியோர் கவிஞரைப் பாராட்டினர்.

கவிஞரின் இரண்டாவது கவிதைத் தொகுப்பு *14-11-1965* அன்று சென்னையில் சத்தியமூர்த்தி மண்டபத்தில் நடந்த மாபெரும் விழாவில் பெருந் தலைவர் திரு. காமராசரால் வெளியிடப்பெற்றது. அப்பொழுது திரு. காமராசர் ''பாரதியாருக்குப் பிறகு தேசத்தையும் தெய்வத்தையும் இணைத்துச் சிறப்பாகப் பாடியவர் ஸ்ரீமான் சோமசுந்தரமே ஆவார்'' என்று பாராட்டினார். அவ்விழாவிற்குத் தமிழக சபாநாயகர் திரு. செல்லபாண்டியன் தலைமை தாங்கினார். திரு. கிருஷ்ணசாமி நாயுடு, கவிஞர். கண்ணதாசன், சின்ன அண்ணமலை, கொத்தமங்கலம் சுப்பு, பேராசிரியர் ந. சஞ்சீவி, அகிலன், திரைப்பட அதிபர் திரு. ஏ.வி. மெய்யப்ப செட்டியார் ஆகியோர் பாராட்டுரைத்தனர். தொழிலதிபர் திரு. பி. எஸ். எஸ். சோமசுந்தரம் செட்டியார் கவிஞருக்குப் பொன்னுடை போர்த்தினர்.

*15–10–1966*- இல் தமிழக முதலமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்களின் எழுபதாவதுபிறந்த நாள் விழா மதுரையில் கொண்டாடப் பெற்ற பொழுது நிகழ்ந்த கவியரங்கிற்குக் கவிஞர் சோமசுந்தரன் தலைமை தாங்கினார் அப்பொழுது முதலமைச்சர் திரு. பக்தவத்சலம் கவிஞருக்குப் பொன்னுடை போர்த்தி ஆசி கூறினார்.

*1965*-ஆம் ஆண்டு டிசம்பரில் தேவகோட்டையில் நடைபெற்ற இராமநாதபுரம் மாவட்டத் தமிழாசிரியர் கழக மாநாட்டில் கவிஞரின்

"தியாகக் குடும்பம்" என்னும் நாடக நூலைத் தொழிலதிபர் திரு. கருமுத்து தி. சுந்தரம் செட்டியார் வெளியிட்டுப் பொன்னுடை போர்த்தினர். மதுரை பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் திரு. டாக்டர் மொ. அ. துரை அரங்கனர் பாராட்டினர்.

21-11-1974 அன்று சென்னை மாவட்ட நூலக மண்டபத்தில் கவிஞரின் பொற்கிழிக் காவியமான "பாண்டிமா தேவி" தமிழக சபாநாயகர் திரு. ம. பொ. சி. அவர்களால் வெளியிடப் பெற்றது. நீதிபதி திரு. கிருஷ்ணசாமி நாயுடு தலைமை தாங்கிக் கவிஞருக்குப் பொன்னுடை போர்த்தினர். அப்பொழுது மறைமலை அடிகளின் புதல்வர் திரு. மறை திருநாவுக்கரசு, முதுபெரும் எழுத்தாளர் நாரண துரைக்கண்ணன், டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், சிலம்பொலி செல்லப்பன், இளமுருகு பொற்செல்வி, "பெருங்கவிக்கோ" வா. மு. சேதுராமன் ஆகிய பலர் பாராட்டுரைத்தனர்.

**பொதுப்பணி :** 1963-ஆம் ஆண்டில் கவிஞர் இராமநாதபுர மாவட்டத் தமிழாசிரியர் கழகத்தைத் தொடங்கினர். 5 ஆண்டுகள் அதன் தலைவராகப் பணியாற்றினர். அதற்கு முன் தஞ்சை மாவட்ட ஆசிரியர் கழகச் செயலராகவும், இராமநாதபுர மாவட்ட ஆசிரியர் கழகச் செயலராகவும் பணி ஆற்றினர். 1971 முதல் இராநாதபுர மாவட்ட அருள்நெறி மன்றத் தலைவர்: 1973-இல் நிகழ்ந்த

எட்டயபுர ''உலகத் தமிழ்ச் சங்க'' அமைப்புத் தலைவர். 1968-ஆம் ஆண்டு முதல் காரைக்குடி அரிமா சங்க (Lions Club) உறுப்பினர்.

**பிரதிநிதி :** சென்னையில் 15நாட்கள் ''யுனெஸ்கோ'' (UNESCO) நடத்திய குழந்தை இலக்கிய ஆய்வரங்கில் தமிழ், தெலுங்கு, மலையாள, கன்னட மொழி எழுத்தாளர்கள் பங்கு பெற்றனர். அதில் கவிஞர் சோமசுந்தரன் தமிழ் மொழிப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்று ஆய்வரங்கில் பங்கு பெற்றார். தமிழக முதலமைச்சர் திரு. பக்தவத்சலம், முன்னாள் திருப்பதி வெங்கடேசுவரா பல்கலைக்கழகத் துணை வேந்தர் திரு. கோவிந்தராஜுலு நாயுடு, திரு. பெ. தூரன் ஆகியோர் ஆய்வரங்கில் பங்கு பெற்றுப் பாராட்டினர்.

1959-ஆம் ஆண்டில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அமெரிக்க''புல் பிரைட் பேராசிரியர்'' திருமதி டாக்டர் நட்லி நடத்திய ஆங்கிலக் கருத்தரங்கில் கவிஞர் பங்கு பெற்றார்.

**உலகத் தமிழ் மாநாடு :** 31–1–1974-இல் இலங்கை யாழ்ப்பாணத்தில் தொடங்கிய நான்காம் உலகத் தமிழ் மாநாட்டுப் பிரதிநிதியாக அழைக்கப்பெற்று ''இருபதாம் நூற்றாண்டில் தமிழ்க் கவிதை'' என்னும் தலைப்பில் கவிஞர் ஆராய்ச்சிக் கட்டுரை சமர்ப்பித்தார்.

**வானொலி :** கவிஞரின் பல்வேறு நிகழ்ச்சிகளை திருச்சி, சென்னை, இலங்கை வானொலிகள் ஒலிபரப்பி உள்ளன.

**ஆங்கிலத்தில் :** கவிஞரின் கவிதைகள் சில ஆங்கிலத் தில் (Lyrical caval cade) என்ற நூலாக வெளி வந்து ஐரோப்பா முழுதும் பரவி உள்ளன.

**சுற்றுப்பயணம்** : கவிஞர் தமிழகத்தின் பல்வேறு மாவட்டங்களிலும் பன்முறை சுற்றுப் பயணம் செய்துள்ளார். இந்தியா முழுதும் மூன்று முறை சுற்றுப் பயணம் செய்துள்ளார். மேலும் *1972* ஏப்ரலில் நேபாளத்திலும், *1973* ஜனவரியில் இலங்கையிலும், *1974* ஆம் ஆண்டில் பிரிட்டன், பிரான்சு, ஜெர்மனி, சுவிட்சர்லாந்து, இத்தாலி, பெல்ஜியம், ஹாலந்து, ஆஸ்திரியா, வாட்டிகன் ஆகிய நாடுகளிலும் சுற்றுப் பயணம் செய்தார். பம்பாய்த் தமிழ்ச்சங்கம், டில்லி தமிழ்ச் சங்கத் திலும் உரையாற்றினர்:

**கதாகாலட் சேபம்:** *1974* மே மாதம் புதுவயல் ஸ்ரீ கைலாச விநாயகர்கோயிலில் தொழிலதிபர் திரு. யெ. மு. விசுவநாதன் செட்டியார் தலைமையில் ''பாண்டிமாதேவி மங்கையர்க் கரசி'' பற்றிக் கவிஞர் முதலில் கதா காலட் சேபம் அரங்கேற்றினர். *1975* மேயில் ''சிலப்பதிகாரம்'' ''ஸ்ரீ மீனுட்சி திருமணம்'' பற்றிக் கதா காலட்சேபம் நிகழ்த்தினர். *1-6-1976* அன்று மகாபாரதம் தொடர் கதா காலட்சேபம் அரங்கேற்றம். *30-12-1977* அன்று ''இராமாயணம்'' தொடர் கதா காலட் சேபம் அரங்கேற்றம். எல்லா நிகழ்ச்சிகளுக்கும்

திரு.யெ. மு.விசுவநாதன்செட்டியார் தலைமை தாங்கிக் கவிஞருக்குப் பொன்னுடை போர்த் தினர்.

**பொன்முடிப்பதிப்பகம்:** *3-6-1963* இல் கவிஞர் ''பொன்முடி பதிப்பகத்தினை''த் தொடங்கி அதன் மூலம் தனது நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறார்.

**அணிந்துரை:** கவிஞரின் தொடக்க கால நூல்கள் பலவற்றுக்கு டாக்டர் மு. வ; டாக்டர் தெ. பொ. மீ; டாக்டர் சி. இலக்குவனார், ஏ. வி. எம்; டி. ஐ ஜி டயஸ், அமைச்சர் சர்க்கரை மன்றாடியார். பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், திரு. சா. கணேசன், மற்றும் பலர் அணிந்துரை வழங்கி உள்ளனர். கவிஞர் தமிழில் முதல் முயற்சியாக எழுதியுள்ள ''சிறுவர்க்கு விஞ்ஞானம்'' என்ற குழந்தைப் பாடல் தொகுதியினை நோபல் பரிசு பெற்ற விஞ்ஞானி திரு. சர். சி. வி இராமன்பாராட்டி வரவேற்றுள்ளார்.

**தொடர்பு:** பழையதலைவர்கள் பலரோடுகவிஞருக்கு இலக்கியத் தொடர்புகள் உண்டு. பாலதண்டா யுதம், ஈ. வி கே. சம்பத் அமைச்சர் கக்கன், பி. ஜி. கருத்திருமன், அமைச்சர் ஆர். வெங்கட் ராமன், ஜெமினி கணேசன், பூவராகன் ஆகியோரோடு சில நிகழ்ச்சிகளில் கவிஞர் பங்கு பெற்றார்.

**நாடகம்:** கவிஞர் கல்லூரியில் படித்த பொழுதே ''வேலின் முனை'' என்னும் நாடகத்தினை எழுதி நடித்தார். அது முதல் ஆறு நாடக நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளார். இவரது நாடகங்கள் தமிழ் நாட்டிலும், பிற மாநிலங்களிலும் தமிழ் மக்களால் நடிக்கப் பெற்று வருகின்றன.

**ஷேக்ஸ்பியர் மொழிபெயர்ப்பு:** கவிஞர் ஆங்கிலத்தில் இருந்து இரண்டு நாவல்களை முதலில் மொழி பெயர்த்து வெளியிட்டார். இப்பொழுது ஷேக்ஸ்பியர் நூல்களைத் தொடர்ந்து மொழி பெயர்த்து வெளியிட்டு வருகிறார். இவரது மொழி பெயர்ப்புக்கள் இலங்கைப் பல்கலைக் கழக, மதுரைப் பல்கலைக் கழக ஆய்வு மாணவர்களால் (Research students) 'தமிழில் ஷேக்ஸ்பியர்' (Shakespeare in Tamil) என்ற தலைப்புக்குப் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

**துணைப்பாடம்:** கவிஞரின் ''உயர்கல்வி தந்த உத்தமர்கள் என்னும் நூல் தமிழ் நாட்டுப் பள்ளிகளில்ஒன்பது, பத்தாம் வகுப்புக்களுக்குத் துணைப்பாடமாக ஐந்து ஆண்டுகள் வைக்கப் பெற்றிருந்தன. கவிஞர் எழுதிய 'மண்ணியல் சிறுதேர்-திறனாய்வு' நூல் பி. ஏ. மாணவர்க ளால் பெரிதும் பயன்படுத்தப் பெற்றது.

**பாத யாத்திரை:** கவிஞர் தேவ கோட்டையில் இருந்து 3–5–1977இல் முதன் முறையாகத் திருச்செந்தூருச்குத் தன் மனைவியுடனும், மற்றும் சில அன்பர்களுடனும் பாதயாத்திரை

புறப்பட்டுச் சென்ருர். அன்பர் ஒருவர் காவடி தாங்கிச் சென்ருர். திருச்செந்தூர்ப் பாத யாத்திரை ஆண்டுதோறும் தேவகோட்டையில் இருந்து சித்ராபௌர்ணமியில் நடைபெறக் கவிஞர் ஆவன செய்துள்ளார். ஓராண்டுக் காலத்தில் கவிஞர் தன் மனைவியுடன் முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகளான திருப்பரங் குன்றம், திருச்செந்தூர், பழநி, சுவாமி மலை, திருத்தணி, பழமுதிர்சோலை ஆகிய தலங்களுக்குத் தேவகோட்டையில் இருந்து பாதயாத்திரையாக சுமார் ஆயிரம் மைல் நடந்து சென்று வழிபட்டார்.

**வார வழிபாடு :** கவிஞர் வாரம் தோறும் வெள்ளிக் கிழமை அன்று கோயிலில் ''வார வழிபாடு'' நடத்துவதில் பெரிதும் ஈடுபாடு உடையவர். *1965*-ஆம் ஆண்டு முதல் இரண்டு ஆண்டுகள் சண்முகநாதபுரத்தில் ஸ்ரீ மீனுட்சி சுந்தரேசு வரர் கோயிலிலும், *1967*-ஆம் ஆண்டு முதல் காரைக்குடியில் முத்துப் பட்டணத்தில் உள்ள செல்வ விநாயகர் கோயிலிலும் தொடர்ந்து வெள்ளிதோறும் வார வழிபாடு நடத்தி வருகிருர்.

# கவிஞர் இதுவரை வெளியிட்டுள்ள நூல்கள்

## கவிதை

| | | |
|---|---|---|
| 1 | கவியரங்கில் கவிஞர் சோமசுந்தரன் | 1-75 |
| 2 | திருமுறைகள் வீட்டு நூல் | 3-50 |
| 3 | கவிஞர் சோமசுந்தரன் கவிதைகள் | 3-50 |
| 4 | பக்திப் பாக்கள் | 2-00 |
| 5 | திரு. வி. க. | 1-75 |
| 6 | ஐம்பொறிகள் | 1-50 |
| 7 | கம்பன் கண்ட அறநெறி | 2-00 |
| 8 | மிருகங்கள் | 2-00 |
| 9 | நூலகம் | 2-00 |
| !0 | சிறுவர்க்கு விஞ்ஞானம் | 1-50 |
| 11 | பாண்டிமாதேவி(பொற்கிழிக் காவியம் | 3-50 |
| 12 | செக்கிழுத்த செம்மல் | 4-00 |
| 13 | ஐரோப்பா | 8-00 |
| 14 | மறைமலை அடிகள் பிள்ளைத் தமிழ் | 4-00 |
| 15 | ஸ்ரீ குருதட்சணமூர்த்தி பிள்ளைத்தமிழ் | 4-00 |
| 16 | Lyrical caval cade | 1-00 |
| 17 | படகு | 4-00 |
| 18 | அன்னை மீனாட்சி அந்தாதி | 3-50 |

## கட்டுரை

| | | |
|---|---|---|
| 19 | கட்டுரைப் பெட்டகம் | 3-50 |
| 20 | கட்டுரைக் கற்கண்டு | 2-00 |
| 21 | கட்டுரைக் கற்பகம் | 2-00 |
| 22 | தீந்தமிழ் இலக்கியத் தேன் | 7-50 |
| 23 | நான்காம் உலகத் தமிழ் மாநாடு | 2-00 |
| 24 | மண்ணியல் சிறு தேர்-திறனாய்வு | 1-50 |
| 25 | பாலனும் கோலனும் | 2-00 |

## நாடகம்

| | | |
|---|---|---|
| 26 | கடமை | 5-00 |
| 27 | தியாகக் குடும்பம் | 3-50 |
| 28 | முகமூடி | 3-50 |
| 29 | வேலின் முனை | 4-50 |
| 30 | ஓரங்க நாடகங்கள் ஒன்பது | 3-50 |
| 31 | கால ஓட்டம் | 3-00 |

## வாழ்க்கைவரலாறு

| | | |
|---|---|---|
| 32 | உயர்கல்வி தந்த உத்தமர்கள் | 1-50 |
| 33 | பெருந்தொழில் வளர்த்த பெரியோர் | 1-75 |
| 34 | நாடு புகழும் ஜி. டி. நாயுடு | 4-00 |
| 35 | மாவீரன் நெப்போலியன் | 4-50 |
| 36 | பாரதப் பிரதமர்கள் | 1-50 |
| 37 | வள்ளல் அழகப்பர் | 3-00 |
| 38 | அடியார் அறுபத்து நால்வர் | 4-00 |

## பயணம்

| | | |
|---|---|---|
| 39 | வட இந்தியப் பயணம் | 4-50 |
| 40 | நேபாளம் | 3-50 |
| 41 | இலங்கை | 4-00 |
| 42 | பிரிட்டன் | 3-50 |
| 43 | பிரான்சு | 3-00 |
| 44 | மேற்கு ஜெர்மனி | 3-50 |
| 45 | சுவிட்சர்லாந்து | 3-00 |
| 46 | இத்தாலி | 7-00 |
| 47 | பெல்ஜியம் | 3-00 |
| 48 | ஹாலந்து | 4-00 |
| 49 | ஆஸ்திரியா | 3-00 |
| 50 | வாட்டிகன் | 3-00 |

## ஷேக்ஸ்பியர்-மொழிபெயர்ப்பு

| | | |
|---|---|---|
| 51 | மாக்பெத் | 5-00 |
| 52 | இரண்டாம் ரிச்சர்டு | 3-50 |
| 53 | அந்தோனியும், கிளியோபாட்ராவும் | 8-00 |
| 54 | எண்ணிய எண்ணியாங்கு (As you like it) | 6-00 |
| 55 | பன்னிரண்டாம் இரவு | 4-00 |
| 56 | வெனிஸ் வியாபாரி | 5-00 |
| 57 | மன்னன் லியர் | 8-00 |

## சரித்திரம்

| | | |
|---|---|---|
| 58 | சீனப்படையெடுப்பு | 6-00 |
| 59 | பாகிஸ்தான்படையெடுப்பு | 7-00 |
| 60 | வங்காள தேசப் போர் | 6-00 |
| 61 | உலகைக் கவர்ந்த முக்கிய நிகழ்ச்சிகள் | 7-00 |

## சிறுகதை, நாவல்

| | | |
|---|---|---|
| 62 | உளவு நங்கை | 3-00 |
| 63 | சர்க்கஸ் பேரரசி | 3-00 |
| 64 | ஆங்கில அருங்கதைகள் | 1-50 |
| 65 | விடுதலே வேட்கை | 1-50 |
| 66 | ஒற்றுமைக் கதைகள் | 1-50 |

# மதுரை மீனாட்சி சரித்திரம்

மதுரை மீனாட்சியின் சரித்திரம் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணத்தில் மிகச் சிறப்பாக வர்ணிக்கப் பெற்றுள்ளது. குமரகுருபரர் எழுதியுள்ள ''மீனாட்சி அம்மைப் பிள்ளைத் தமிழிலும்'' மீனாட்சியைப் பற்றிய சிறப்புக்கள் பரக்கக் காணலாம். செட்டி நாட்டுத் தாலாட்டு களிலும் மீனாட்சியின் பெருமை விரவி வரக் காண்கிறோம்.

மதுரையில் தடாதகைப் பிராட்டியாக அவதரித்த மீனாட்சியைப் பரஞ்சோதி முனிவர் வணங்கும் பொழுது அவளது சரித்திரம் முழுவதையுமே வெளிப்படுத்துகிறார்.

''செழியர்பிரான் திருமகளாய்க் கலைபயின்று,
முடிபுனைந்து, செங்கோல் ஓச்சி,
முழுதுலகம் செயம்கொண்டு, திறைகொண்டு
நந்திகணம் முனைப்போர் சாய்த்து,
தொழுகணவற்கு அணிமண மாலிகைசூட்டி,
தன்மகுடம் சூட்டி, செல்வம்
தழைவுறுதன் அரசளித்த பெண்ணரசி
அடிக்கமலம் தலைமேல் வைப்பாம்.''

சோமசுந்தரப் பெருமானைத்தொழும் பொழுது அவரது சரித்திரம் முழுதும் பாடலில் வெளிப் படுகிறது.

''சடைமறைத்து, கதிர்மகுடம் தரித்து, நறும்
கொன்றை அம்தார் தணந்து, வேப்பம்
தொடைமுடித்து, விடநாகக் கலன் அகற்றி,
மாணிக்கச் சுடர்ப்பூண் ஏந்தி,
விடைநிறுத்தி, கயல்எடுத்து, வழுதிமரு
மகனுகி, மீன நோக்கின்
மடவரலே மணந்துலகம் முழுதாண்ட
சுந்தரனே வணக்கம் செய்வாம்.''

மீனுட்சி அவதரித்த இடம் மதுரை. அதன் சிறப்பு மிக அருமையாக வர்ணிக்கப் பெறுகிறது. தில்லேயில் உள்ள நடராசப் பெருமான் தெற்கு நோக்கி ஆடுகிருர். அதற்குக் காரணம் சந்தனத் தென்றலே நுகரவும், மதுரைச் செந்தமிழை மாந்தவும், அதன்மூலம் களேப்புத் தீரவும் நடராசர் தெற்கு நோக்கி ஆடுவதாகப் பரஞ்சோதி முனிவர் கற்பனே செய்கிருர்.

''கடுக் கவின்பெறு கண்டனும்
தென்திசை. நோக்கி
அடுக்க வந்து உவந்து ஆடுவான்:
ஆடலின் இளேப்பு
விடுக்க, ஆரமென் கால்திரு
முகத்திடை வீசி,
மடுக்கவும், தமுழ் திருச்செவி
மாந்தவும் அன்ருே!''

மதுரைக்குப் பெருமை அங்கிருந்த தமிழ்ச் சங்கம்! அதில் கடவுளே வீற்றிருந்து தமிழ் ஆய்ந்தார் என்பதனேப்புலவர் அருமையாகப் புலப்படுத்துகிருர்

''கண்ணுதல் பெருங்கடவுளும்
கழகமோடு அமர்ந்து
பண்ணுறத் தெரிந்தாய்ந்த இப்
பசுந்தமிழ், ஏனை
மண்ணிடைச் சில இலக்கண
வரம்பிலா மொழிபோல்
எண்ணிடைப்படக் கிடந்ததா
எண்ணவும் படுமோ?''

என்கிறார்.

மதுரையின் மற்றொரு சிறப்பு மதுரையை மீனாட்சி, சோமசுந்தரர், முருகப் பெருமான் (திருப்பரங்குன்றம்) ஆகிய மூவரும் ஒருங்கே முறை செய்தது ஆகும். பாடல் வருமாறு:

''உலகம் யாவையும் ஈன்றவள்,
உம்பருள் உயர்ந்த
திலக **நாயகி**, **பரஞ்சுடர்**,
**சேய்** என மூன்று
தலைவரால் முறை செய்தநாடு
இஃதன்றிச் சலதி
சூலவு பாரில் உண்டாகுமோ?
துறக்கத்தும் அஃதே!''

பாண்டி மங்கையின் கொங்கைகளாகத் திருப்பரங்குன்றமும், பிரான்மலையும் திகழ, கொப்பூழ் ஆகத் திருச்சுழி விளங்க. வயிறாகக் குற்றாலம் வரை செங்கையாகத் திருவேடகம் ஒளிர, மேனியாகத் திருப்புவனம் மிளிர, தோளகத்

திருநெல்வேலி துலங்க. முகமாக மதுரை பிரகாசிக்கிறது என்கிறார் புலவர்.

''கொங்கையே பரங்குன்றமும்
கொடுங்குன்றும், கொப்பூழ்
அங்கமே திருச்சுழியல், அவ்
வயிறு குற்றாலம்,
செங்கை ஏடகம், மேனியே
பூவணம், திரள்தோள்
பொங்கர் வேய்வனம் திருமுகம்
மதுரையாம் புரமே''

தரைக்குத் திலகமாக மதுரை விளங்குகிறது.

''திருமகட்கு ஒரு தாமரைக்கூடம். திருமால்
மருமகட்கு வெண்தாமரை மாடம். ஞானம்
தருமகட்கு யோகத்தனிப் பீடம்; தரையாம்
பெருமகட்கு அணிதிலகமே ஆனது இப்பேரூர்''

மதுரையில் பறவையின் ஒலியும், மறைகளின் ஒலியும் எங்கும் கேட்கின்றன.

''ஆலவாய் உடையான் என்றும்
அங்கயற் கண்ணி என்றும்
சோலைவாழ் குயிலின் நல்லார்
சொல்லி ஆங்கு ஒருங்குசொல்லும்
பால்அவாம் கிளிகள், பூவை
பன்முறை குரவன் ஓதும்
நூல் அவாய்ச் சந்தை கூட்டி
நுவல்மறைச் சிறாரை ஒத்த''

சிதம்பரம் காண முக்தி. காசி இறக்க முக்தி: காளத்தி வழிபாடு செய்ய முக்தி. மதுரை கேட்க

முக்தி. ஆகவே தலங்களில் எல்லாம் எளிமையாக முக்தி தருவது பராசக்தி அவதரித்த மதுரையே ஆகும்.

மதுரையில் இருந்து மலயத்துவச பாண்டியன் ஆண்டு கொண்டிருந்தான். அவன் மனைவி பெயர் காஞ்சனமாலை. (சூரசேனன் மகள்). அவர்களுக்கு நீண்ட நாட்கள் மக்கட் பேறில்லை. எனவே மன்னன் மகவேள்வி (புத்திர காமேஷ்டி யாகம்) புரிந்தான். ஓமத்தி வலஞ்சுழித்தது. அரசனின் வலத்தோளும் அரசியின் இடக்கண்ணும் துடித்தன. வேள்வித் தீயில் மூன்று வயதுடைய மீனாட்சி அவதரித்தாள்.

''தெள்ளமுத, மென்மழலை சிந்த இளமூரல்
முள்எயிறு அரும்பமுலை மூன்றுடைய தோர்பெண்
பிள்ளைஎன மூஒரு பிராயமொடு நின்றாள்
எள்ளரிய பல்உயிரும் எவ்வுலகும் ஈன்றாள்''

போன பிறவியில் விச்சுவாசு என்ற விஞ்சையன் மகள் விச்சாவதி பராசக்தி மீனாட்சியை வணங்கி என் மகளாகப் பிற என்று வரம் கேட்டாள். அதற்கு மீனாட்சி ''அடுத்த பிறவியில் நீ மலயத்துவசன் மனைவியாக ஆவாய். நான் உன் மகளாக ஆவேன்'' என்று வரம் கொடுத்தாள். அவ்வாறே இப்பிறவி யில்விச்சாவதி காஞ்சனமாலையாகப் பிறக்க, மீனாட்சி அவளது மகளாக வேள்வித் தீயில் அவதரித்தாள்.

மீனாட்சி எப்பொழுதும் மூன்று வயதுக் குழந்தை யாகத்தான் காட்சி கொடுத்திருக்கிறாள். பரஞ்

சோதி முனிவர் கருத்துப்படி மீனுட்சி வேள்வித் தீயில் மூன்று வயதுக் குழந்தையாக வந்ததை அறிகிறோம், குமரகுருபரர் ''மீனுட்சி அம்மைப் பிள்ளைத்தமிழ்'' பாடியபொழுதும் மீனுட்சி மூன்று வயதுக் குழந்தையாகவே வந்து அவருக்கு முத்து மாலை பரிசளித்தாள். சுமார் 200 ஆண்டுகட்கு முன் மதுரையை ஆண்ட ரோஸ்பீட்டர் என்னும் ஆங்கிலத் தண்டல்நாயகம் (கலெக்டர்) மீனுட்சி அம்மன் கோயில் வழியாகப் போகும்பொழுது சந்நிதி முன் தனது தொப்பியைக் கழற்றி வணங்கிச் செல்வானும். ஒரு நாள் இரவில் அவன் கனவில் மூன்று வயதுப் பெண் குழந்தை ஒன்று அவனை அழைக்க, அவன் தூக்கம் கலைந்து எழுந்தான். அவன் கையைப் பிடித்து அக்குழந்தை இழுக்க, அவன் உடனே கட்டிலைவிட்டு எழுந்து, பிள்ளையைப் பின்பற்றி நடந்தான். மாளிகை அறையை விட்டு வெளியேறி முற்றத்துக்கு வந்ததும், மாளிகை அறையின் உத்திரம் நொறுங்கிக் கீழே விழுந்ததாம். தூங்கிய வேலைக்காரன் அங்கு நசுங்கிச் செத்தான். ஆனுல் தண்டல் நாயகம் குழந்தையால் உயிர் தப்பினுர். தன்னைக் காப்பாற்றிய குழந்தை யார் என்று தண்டல் நாயகம் தேடினுர். குழந்தை மறைந்து விட்டது. பிறகு விபரம் அறிந்தவர்கள் மூலம் தன்னைக்காப்பாற்றிய மூன்று வயதுக்குழந்தை மீனுட்சிதான் என்று உணர்ந்து தண்டல் நாயகம் கோயிலுக்கு வந்து மீனுட்சியை வணங்கி, அவளுக்குக் குதிரை வாகனக் கால்மிதியும், மணி

மாலையும் பரிசளித்தான். அவற்றை இன்றும் கோயில் கருவூலத்தில் காணலாம்.

மீனுட்சி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்கிறுள். அவளுக்குத்தாலாட்டுப் பாடுகிறுர் குமரகுருபரர். ''இரத்தின அடுப்பு வைத்து, பவள விறகு இட்டு, சங்குப் பானை ஏற்றி, தேன்உலை நீர் பெய்து, முத்து அரிசி போட்டுச் சோறு சமைக்கும் குழந்தைகள்நிறைந்த மதுரைக்கு அரசியே! தாலோ தாலேலோ! அருள் சூற்கொண்ட அங்கயற்கண் அம்மையே! தாலோ தாலேலோ'' என்கிறுர்.

மீனுட்சி குறுகுறு நடந்து, சிறுகைநீட்டி, இட்டும் தொட்டும் வளர்கிறுள். கற்பன கற்றுப் படைப் பயிற்சியும் பெற்றுக் கன்னி ஆகிறுள். அவளுக்குத் 'தடாதகை' என்பது இயற்பெயர். ஓர்நாள் மன்னன் மீனுட்சிக்கு முடிசூட்டினுன். சுமதி என்பவன் நல்லமைச்சன் ஆனுன். சின்னுட் களில் மலயத்துவச பாண்டியன் மறைந்தான்.

''மண்நாடு மகட்குஅளித்து, வான்நாடு
பெற்றுன் அம்மகவு பெற்றுன்.'

மீனுட்சி மதுரை அரசியாகி ஒரு குடைக்கீழ் உலகெல்லாம் சிறப்பாக ஆண்டாள். கன்னி மீனுட்சி ஆண்டதால் இந்நாடு ''கன்னிநாடு'' என்னும் சிறப்புப் பெயர் பெற்றது. மீன் தன் பார்வையால் குஞ்சுகளைக்காப்பதுபோல் மீனுட்சி தன்குடிமக்களைக் காத்தாள்.

''ஒளியால் உலகுஈன்று உயிர்அனைத்தும்
மீன்போல் செல்வி உறநோக்கி
அளியால் வளர்க்கும் அங்கயற்கண்
அன்னே! கன்னி அன்னமே!''

என்று பரஞ்சோதி முனிவர் பாடுகிறார்.

மீனாட்சிக்குத் திருமணப் பருவம் வந்தது. ''அவளுக்கு இன்னும் தக்கவரன் கிடைக்க வில்லையே'' என்று தாய் வருந்தினாள். அதற்கு மீனாட்சி, ''அம்மா! வருந்தாதே!! திருமணம் ஆகும் பொழுது ஆகும். அதற்குள் நான் நாடெங்கும் சுற்றிப் படை நடத்திக் கொற்றம் நாட்டி வருவேன்'' என்று கூறித் தேர்ஏறிப் பெண் படையுடன் புறப்பட்டாள்.

''உலகத்தின் மாசுமறு குறை நீக்கும் தாயே! என் மறுவும் துடை' என்று திங்கள் மீனாட்சிக்கு வெண்கொற்றக் குடையாக வந்தது. திசையெலாம் வென்று வெற்றி முரசு கொட்டிய மீனாட்சி கயிலை மலையை அடைந்தாள். கயிலைமலையில் முன்பு பார்வதியாக இருந்து, மதுரைக்கு மீனாட்சியாகச் சென்றவள் திரும்பி வந்தது குறித்துக் கயிலைமலை மகிழ்ந்து தனது அருவிக் கண்ணீர் சிந்தி,

''அன்னையே வா' என்று நீரொலியால் வரவேற்றது

''வானார் கயிலை, மலையான் மகள்
தன்னை நீத்துப்
போனாள் வந்தாள் என்று அருவிக்கண்
புனல் உக்கு அந்நீர்

ஆறு ஒலியால் ''அனேவா!'' என்று
அழைஇத் தன்தேசு
தானும் நகையால் தழீஇ, எதிர்
ஏற்பச் சென்றாள்.''

மீனாட்சியின் பெண்படையை எதிர்த்துச் சிவபெருமானின் நந்திப்படை சென்றது. சற்று நேரத்தில் அது தோற்றது. இச் செய்தியினைத் திருநந்திதேவர் சிவபெருமானுக்கு அறிவித்ததும், சிவபெருமான் ''அறம்'' என்னும் காளைமீது ஆரோகணித்துப் போர்க்களம் புகுந்தார்,

''உடையான் அடிதாழ்ந்து இவைஓதலும்
ஓதம் நீத்தச்
சடையான் இளவாள் நகைசெய்து,
தருமச் செங்கண்
விடையான், சிலையான், இகல்வெற்றி
விளக்கும் தெய்வப்
படையான் எழுந்தான், அமராடிய
பாரிற் சென்றான்.''

ஒற்றைக் காலில் வெற்றிக்கழலும், இடையில் புலித்தோலும், கையில் மழுவும், மெய்யில் நீறும், மார்பில் நூலும், தலையில் சடைமுடியும் தன்னையே நோக்கும் கருணைவிழியும் கொண்ட தனது வலப் பாதியைச் சிவனிடம் கண்டாள் மீனாட்சி. உடனே அவளது நேர்பார்வை தரைமீது பதிந்தது.

''ஒற்றை வார்கழல் சரணமும்
பாம்பசைத்து உடுத்த வெம்புலித்தோலும்
கொற்ற வாள்மழுக் கரமும்
வெண்ணீறணி கோலமும், நூல்மார்பும்,

கற்றை வேணியும், தன்னேயே நோக்கிய
கருணேசெய் திருநோக்கும்
பெற்ற தன்வலப் பாதியைத்
தடாதகைப் பிராட்டியும் எதிர்கண்டாள்.''

மீனுட்சி நாணத்தால் தலேகவிழ்ந்து நின்ருள். அவளது மூன்ரும் கொங்கை மறைந்தது. ''எதிர் நிற்கும் சிவனே நின் கணவனுவான்'' என்று மீனுட்சியிடம் அவளது அமைச்சனுன சுமதி உரைத்தான். மீனுட்சி சிவனே நோக்கினுள்.

சிவன் மீனுட்சியிடம், 'என்று தொட்டு நீ புறப்பட்டு வந்தாயோ அன்று தொட்டு நாமும் மதுரைவிட்டு வந்தோம். பழைய வரப்படி வரும் சோமவாரத்தில் (திங்கட்கிழமை) மதுரைக்கு மணம் செய்ய வருவோம். நின் மதுரைக்கு நீ செல்க'' என்ருன்.

''என்று தொட்டு நீ திசையின் மேல்
சயங்குறித்து எழுந்து போந்தனே, யாமும்
அன்றுதொட்டு, நம் மதுரை விட்டு
உனேவிடாது அடுத்து வந்தனம்; உன்னேத்
தொன்றுதொட்ட நான்மறை உரை
வழிவரு சோமவாரத்து ஓரை
நன்றுதொட்ட நாள் மணஞ்செய வருதும்
நின்நகர்க்கு நீஏகு என்ருன்.''

அப்படியே மீனுட்சி மதுரைக்கு வந்தாள். எங்கும் மண ஓலே பறந்தது. நாடெங்கும் கடிமுரசு அறைவித்தனர். மீனுட்சி திருமணம் காண

மண்ணவரும் விண்ணவரும் மதுரையில் கூடினர். திருமால், பிரமன், சூரியன், சந்திரன், இந்திரன், முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்தொன்பது மருத்துக்கள், அசுவினிதேவர்கள் இருவர் ஆகிய அனைவரும் வந்தனர்.

சோமவாரம் வந்தது. திருநந்தி தேவர் சிவபெருமானுக்குச் செய்தி உணர்த்தினர். சிவபெருமான் திருமணக்கோலம் பூணமுன்வந்தார் அவருக்குக் குபேரன் அலங்காரம் செய்தான். பட்டாடை உடுத்தி, அரை ஞாண் பூட்டி, கொண்டை போட்டு, குறிஞ்சிப்பூச்சூட்டி, நீறுபூசி, கஸ்தூரியும் சந்தனமும் கலந்து தேய்த்து, பன்னீர் தெளித்து, கற்பகப்பூமாலை அணிவித்தான். சிவபெருமான் காளை வாகனத்தில் மதுரைக்குப் புறப்பட்டார்.

நிருதி கண்ணுடி காட்ட, குபேரன் பவுன் சிந்த, எமன் வழி விலக்க, ஆதிசேடன் விளக்கு ஏந்த, பிரமன் தாள் சுமக்க, கங்கையும் காவிரியும் கவரி வீச, குண்டோதரன் குடை தாங்க, சிவன் அறம் என்னும் விடை மேல் வந்தான்.

''நிருதி ஆடிகொண்டு எதிர்வர, அடிக்கடி
    நிதி முகந்து அளகைக்கோன்
கருதி ஆயிரம் சிதறிட, தண்டி
    நன்காஞ்சுகர் வினை செய்ய
பரிதி ஆயிரம் பரைடவி உரகரும்
    பன்மணி விளக்கு ஏந்த
சுருதி, நாயகன் திருவடி
    முடியின் மேல் சுமந்து பின்புறம்செல்ல,

கங்கை காவிரி ஆதிய நவநிதிக்
கன்னியர் குளிர் தூங்க
பொங்கு வார்திரைக் கொழுந்தெனக்
கவரிகள் புரட்ட, வெண்பிறைக்கீற்றுத்
துங்க வாள்எயிற்று, இருளுடல்,
குழிவிழி, சுடர் அழல் செம்பங்கி
சங்க வார்குழைக் குறிய
குண்டோதரன் தண்மதிக் குடைதாங்க''
சிவன் மதுரைக்கு ஒரு நொடியில் வந்தான்.

''கருப்பூர சுந்தரன், பூங்கடம்பவன சுந்தரன்
உள் கரவாத் தொண்டர்
விருப்பூரும் கலியாண சுந்தரன் நல்
அறவடிவாய் விளங்கும் ஏற்றுப்
பொருப்பூரும் அபிராம சுந்தரன், தேன்
புடைகவிழப் பொன்னிற் பூத்த
மருப்பூசும் சண்பகசுந்தரன்,
மகுட சுந்தரன் தான் வாழி மன்னே!
மான்மத சுந்தரன், கொடிய பழியஞ்சு
சுந்தரன், ஓர்மருங்கில் ஞானத்
தேன் மருவி உறைசோமசுந்தரன், தேன்
செவ்வழியாழ் செய்யப் பூத்த
கான் மருவு தடம்பொழில் சூழ் ஆலவாய்ச்
சுந்தரன், மீன் கணங்கள் சூழப்
பால்மதிசூழ் நான்மாடக் கூடல் நாயகன்
மதுரா பதிக்கு வந்தான்

சிவன் வந்துவிட்டான் என்று நகரெங்கும் பொற் சின்னங்கள் ஒலித்தன.

''தேவர்கள் தேவன் வந்தான்
செங்கண்மால் விடையான் வந்தான்
மூவர்கள் முதல்வன் வந்தான்
முக்கண்எம் பெருமான் வந்தான்
பூ அலர் அயன், மால் காணுப்
பூரண புராணன் வந்தான்
யாவையும் படைப்பான் வந்தான்
என்றுபொற் சின்னம் ஆர்ப்ப''

மணமகனுகச் சிவன் வந்த காட்சியைக் கண்ட மதுரை மக்கள் அளவிலா மகிழ்ச்சி உற்றனர்.

''நங்கைஎன் நோற்ருள் கொல்லோ
நம்பியைத் திளைத்தற் கென்பார்
மங்கையை மணப்பான் என்னே
வள்ளலும் நோற்ருன் என்பார்
அங்கடி மதுரை என்னே
ஆற்றிய தவம்தான் என்பார்
இங்கிவர் வதுவை காண்பான்
என்னநாம் நோற்ரும் என்பார்.''

காஞ்சனமாலை சிவபெருமானின் பாத பங்கயம் கழுவி, பட்டாடையால் துடைத்து, பன்னீர் தெளித்து, மந்தாரப்பூச்சாத்தி, இருகை கூப்பி வணங்கி, ''பெருமானே! கன்னி மீனுட்சியையும், கன்னித் தமிழ்ப்பாண்டி நாட்டையும் ஏற்று ஆள்க' என்ருள். பெருமான் புன்னகை பூத்தார்.

''அருமையால் அடியேன் பெற்ற
அணங்கினை வதுவை செய்து இத்
திருநகர்த் திருவும் கன்னித்
தேயமும் கைக்கொண்டாள்க என்று

உரைசெய்தான் அதற்கு நேர்வார்
உள்நகை உடையராகி
மருகனுர் இயங்கள் ஆர்ப்ப
வதுவை மண்டபத்தைச் சேர்ந்தார்.''

மணவறை மேடையில் சோமசுந்தரப் பெருமான் அருகில் மீனுட்சி அம்மை வீற்றிருந்த காட்சி

''கற்பக மருங்கில் பூத்த
காமரு வல்லி''யின் காட்சியை
ஒத்திருந்தது,

கற்பகமும் காமருவல்லியும் போலவும், பண்ணும் இசையும் போலவும், பாலும் சுவையும் போலவும், நீரும் குளிர்ச்சியும் போலவும், பூவும் மணமும் போலவும், மணியும் நிறமும் போலவும் அம்மையும் அப்பனும் இணைந்திருந்தனர்.

திருமணச் சடங்கு தொடங்கியது. திருமால் தாரை வார்த்துக் கொடுக்க, சிவபெருமான் மீனுட்சி அம்மையின் கைப் பிடித்தார். வானவர் பூமாரி பொழிந்தனர்.

''அத்தலை நின்ற மாயோன்
ஆதி செங்கரத்து, நங்கை
கைத்தலம் கமலப் போது
பூத்த தோர் காந்தள் ஒப்ப
வைத்து, அருமனுவாய் ஓதக்
கரகநீர் மாரிபெய்தான்
தொத்தலர் கண்ணி விண்ணோர்
தொழுது பூமாரி பெய்தார்.''

காமதேனுவின் பால், கற்பகக்கனி, நறுநெய், கறும்புச் சாறு, சேர்த்த பொங்கலைத் தங்க வட்டி வில் திருக்கை தொட்டு உண்டார் சிவபெருமான். மீனுட்சிக்குத் தாலி கட்டினுர்.

''சுற்றும் நான் மறைகள் ஆர்ப்ப,
தூரியும் சங்கம் ஏங்க
கற்ற நான் முகத்தோன் வேள்விச்
சடங்குநூல் கரைந்த ஆற்றுல்
முற்ற மங் கலநாண் சாத்தி,
முழுதுலகு ஈன்றுள் செங்கை
பற்றினன், பற்றிலார்க்கே
வீடருள் பரமயோகி.''

திருமணக் சடங்குகள் மேலும் தொடர்ந்தன. மீனுட்சியின் பாதங்களைப் பற்றிச் சிவபெருமான் அம்மிமீது வைத்தார். அருந்ததி காட்டினுர்.

அருந்ததி எதிரேவர அம்மை கண்டாள்.

காளைக் கொடி நீத்துக் கயற்கொடி தாங்கி, பாம்புக் கலன் நீத்துத் தங்க ஆபரணம் பூண்டு, உருத்திராக்க மாலை நீத்து வேப்பம்பூ மாலை சூடி, புலி ஆடை நீத்துப் பொன்னுடை அணிந்து, சந்திர முடி நீத்து வயிரமுடி புனைந்து சோமசுந்தரப் பெருமான் சோமசுந்தர பாண்டியனுக விளங்கினுர்.

''அதிர்விடைக்கொடி அம்கயற்கொடி ஆக,
அராக்கலன் பொற்கலனுக,
பொதி அவிழ் கடுக்கை வேம்புஅலர் ஆக,
புலி அதள் பொலந்துகில் ஆக,

மதிமுடி வயிரமணிமுடி ஆக,
மறைகிடந்து அலம்பு மாமதுரைப்
பதியுறை சோமசுந்தரக் கடவுள்
பாண்டியன் ஆகி வீற்றிருந்தான்.''

மாப்பிள்ளை வீட்டார் அனைவரையும் விருந்துண்ணப் பெண் வீட்டார் அழைத்தனர். ''சிவபெருமானின் பொன்னம்பல நடனம் காணுமல் உண்ணும் மரபில்லை'' என்று பதஞ்சலி, வியாக்கிரபாதர் என்னும் முனிவர்கள் கூறினர்.

''பொன் அவிர் கமலம் பூத்த
புனிதநீர் ஆடித் தத்தம்
நன்னெறி நியமம் முற்றி
நண்ணினர்; புலிக்கா லோனும்
பன்னக முனியும் தாழ்ந்து
பரவி, ''அம்பலத்துள் ஆடும்
நின்னருள் நடங்கண்டுண்பது
அடியேங்கள் நியமம்'' என்ருர்.

அவர்களுக்காக மதுரை வெள்ளியம்பலத்து ஆடினர் பொன்னம்பலப் பெருமான். அதுகண்டு அனைவரும் பரவி மகிழ்ந்தனர்.

''ஆடியரேம் பொருட்டு வெள்ளி
அம்பலத்து ஆடல் போற்றி!
பொடிஅணி தடந்தோள் போற்றி!
புரிசடை மகுடம் போற்றி!
கடிஅவிழ் மலர்மென் கூந்தல்
கயல்விழி பாகம் போற்றி!
நெடியதற் பரமா னந்த
நிருத்தனே! போற்றி. போற்றி!''

சமையற்காரர் மீனாட்சியிடம் ''ஆயிரத்தொரு வகை உணவு காய்கிறது'' என்றனர். அமிர்தம் உண்டு பசி துறந்த தேவர்கள் அன்னத்தைத் திரும்பியும் பார்க்கவில்லை. தன் வீட்டுச் செல்வப் பெருக்கால் செருக்குற்ற மீனாட்சி, சிவபெருமானிடம் ''உணவு காய்கிறது'' என்றாள். அப்பொழுது குண்டோதரன் ''பசி வயிற்றைக் கிள்ளுகிறது'' என்றான். ''இவனுக்கு ஒரு பிடி சோறு போடுக'' என்றாள் மீனாட்சி. குண்டோதரன் அடுப்பங்கரையில் புகுந்தான். அங்கிருந்த சோறு, கறி, குழம்பு, அரிசி, பருப்பு, அண்டா, குண்டா அனைத்தையும் தின்று தீர்த்தான். தண்ணீர் முழுவதையும் பருகி முடித்தான், ''இன்னும் பசிக்கிறது '' என்றான்.

மீனாட்சி பயந்து சிவனிடம் சென்று தலை குனிந்து நின்றாள். அப்பொழுது சிவன், ''குண்டோதரன் உண்டு மீதமிருந்தால் பூத கணங்களை அனுப்புகிறேன்'' என்றான், உடனே மீனாட்சி, ''போதும் போதும். இவன் ஒருவனே போதும். இனி யாரையும் அனுப்பினால் ஊரையே வயிற்றுள் வைப்பர். உனக்கு உருத்திர மூர்த்தி என்ற பெயர் தகும்'' என்றாள்.

குண்டோதரன் ''வயிறு காய்கிறது'' என்று வந்தான். சிவபெருமான் அன்னக் குழியும், வைகை ஆறும் வரவழைத்து விளையாட்டை முடித்தார். காஞ்சனை நீராட எழுகடலை மதுரைக்கு வரவழைத்தார்.

மலயத்துவசனை அழைப்பித்தார். இவ்வாறு மீனாட்சி திருமணம் மதுரையில் சிறப்பாக நிறைவேறியது. அன்று முதல் மீனாட்சி-சுந்தரேசுவரர் இருவரும் மதுரையில் வீற்றிருந்து மக்களுக்கு அருள் புரிந்து வருகின்றனர்.





# அன்னை மீனாட்சி அந்தாதி

## காப்பு

*அன்னையே மீனாட்சி அந்தாதி நான்பாட*
*இம்மையே என்முன் எழுந்தருள்வாய்!-கண்ணேயே*
*பாடும் இமைபோலப் பாடுகிறேன்; என்தமிழில்*
*நாடும் நயனத்தை நல்கு!*

## முதல் பத்து

ஆரா அமுதே என் அன்னாய்!
அருளால் உலகம் ஆட்கொண்டாய்
பேரா யிரம்நீ பெற்றாலும்
பிரியம் என்மேல் உற்றாயே!
சீராய்ப் பேணிப் பாலூட்டிச்
சிறியே னுக்கும் தமிழூட்டித்
தேராய் நிற்கும் தாயே! நான்
1) தேரில் பொம்மை காப்பாயே!

காப்பாய் என்றே பலகாலும்
கடைக்கண் அருளால் வளர்கின்றேன்
தோப்பாய் வாழும் உலகத்தில்
தொண்டுக் குயில்கள் பரவட்டும்
ஏய்ப்பார் பெருகிப் போனூர்கள்
இதயம் கிழித்தே எறிந்தார்கள்
தாய்ப்பால் அருந்தும் உலகத்தைத்
2) தாயே தினமும் கடைக்கண்பார்

பார்த்துச் சலித்தே மறைந்தாயோ?
பகடைக் காயாய் உலகத்தைத்
தூர்த்தர் உருட்டும் நிலைகண்டே
தூணில் மறைந்தே நின்ருயோ?
வேர்த்துப் பாடும் புலவோர்கள்
வெறுத்தே ஓடக் கண்டே நீ
தீர்த்தங் களிலே கலந்தாயோ?
3) தீராப் பொறுமை கொண்டாயோ?

---

3) தூர்த்தர்—தீயவர்கள்

கொண்டாய் முத்தாம் கணவனையே!
    கொழுந்தாய் என்றும் திகழ்கின்றாய்,
கண்டன் ஊரைக் கண்டவள்நீ
    கன்றும் உயிர்கள் பயிராக
வண்டாய் புதுவயல் கொண்டவள் நீ
    வைகை மணலில் வாழ்ந்தவள் நீ
பண்டைப் பெருமை உனதென்றே
4)    பழஞ்சங் கங்கள் பாடுதம்மா!

---

4) கவிஞர் அரு. சோமசுந்தரனின் தாயார் பெயரும் மீனாட்சி
மதுரை மீனாட்சியையும் அன்னை மீனாட்சியையும் இணைத்துப் பல பாடல்களில குறிப்புக்கள் வரும்.

முத்து — முத்துப் போன்ற சொக்கேசப் பெருமானை மதுரை மீனாட்சி கணவனாக அடைந்தாள்.
அன்னை மீனாட்சி முத்துராமனைக் கணவனாகப் பெற்றாள்.

கொழுந்து — மதுரை மீனாட்சி தீக்கொழுந்தில் பிறந்தாள்.
அன்னை மீனாட்சி தீக்கொழுந்து போல நல்ல சிவப்பு நிறம்.

கண்டன் ஊர் — மதுரை மீனாட்சி கறைக்கண்டன் ஆகிய சிவனது ஊராகிய கயிலையைக் கண்டவள்
அன்னை மீனாட்சி கண்டனூரில் பிறந்தவள்.

புதுவயல் — பல உயிர்கள் பிறக்கப் புதிய வயல்களை உருவாக்குபவள் மதுரை மீனாட்சி.
புதுவயல் என்னும் ஊரில் அன்னை மீனாட்சி திருமணம் செய்விக்கப் பெற்றுப் பல பிள்ளைகளைப் பெற்றவள்.

வைகை மணல் — மதுரை மீனாட்சி வைகை மணலில் வாழ்ந்தவள்.
அன்னை மீனாட்சி கண்டனூரில் உள்ள கண்மாயாகிய வையைக் கரையில் வளர்ந்தவள்.

அம்மா! தாயே மீனுட்சி!
ஆண்டாய் நீயும் பலகாலம்
சும்மா இருந்தே இன்றைக்கும்
சுகங்கள் தந்தே காக்கின்ருய்
பெம்மா னுக்குப் பேரில்லை
பேசும் சக்தி நீயன்ருே!
சும்மா டேந்தும் மண்கூடைச்
5) சொக்கே சற்கும் தொழில்தந்தாய்!
தந்தாய் நல்ல பிள்ளைகளே
தமிழுக் கென்றே தந்தாயே!
பந்தாய் ஆடும் உலகத்தில்
பஞ்சாய் நஞ்சாய்ப் போகாமல்
சிந்தா மணியாய் வாழ்கென்றே
செயலுக் குருவம் தந்தாயே!
வந்தா ரெல்லாம் வாழ்த்திடவே
6) வளர்மா மதுரை நின்ருயே!

---

5) ஆண்டாய்—மதுரை மீனுட்சி பல்லூழிக்காலம் உலகை ஆண்டாள். அன்னை மீனுட்சி பல ஆண்டுகள் குடும்பத்தைச் சிறப்பாக நிர்வகித்தாள்.

சும்மா — மதுரைமீனுட்சி இப்பொழுது உலகோரின் ஊனக் கண்களுக்குத் தோன்ருமல் மறைந்திருந்து அமைதியாக இருந்து காக்கிருள். அன்னை மீனுட்சி தமது 42ம் வயதில் இயற்கை எய்தி, இப்பொழுது தெய்வமாக அமைதியாக இருந்து காக்கிருள்.

பேசும்சக்தி—சிவன் சிவனே என்று அமைதியாக இருப்பான். மதுரை மீனுட்சிதான் சக்தி கொடுத்தாள் அதுபோல் அன்னை மீனுட்சிதான் குடும்பத்தின் சக்தியாகத் திகழ்ந்தாள்

நல்லபிள்ளைகள்—மதுரை மீனுட்சிக்கு விநாயகர், முருகன் என்ற நல்ல பிள்ளைகள் உண்டு அன்னை மீனுட்சிக்கும் கவிஞர் அரு. சோமசுந்தரன், ஆண்டான், இராசகோபால், மெய்யப்பன் சோலை என்னும் நல்ல பிள்ளைகள் உண்டு.

நின்றும் உன்றன் சந்நிதியில்
நெல்லின் மணிபோல் மானிடர்கள்
குன்றும் வந்து குவிகின்றூர்
கொட்டும் கண்ணீர் பொழிகின்றூர்.
கன்றும் நின்று கதறுவதும்
கைகள் கூப்பித் தொழுவதுவும்
மன்றில் உன்செவி விழவிலேயா?
7) மலரும் உளத்தில் கனிவிலேயா?

கனியும் பாலும் கற்கண்டும்
கன்னித் தமிழும் மாலேகளும்
தனியாய் மஞ்சள் குங்குமமும்
தாளில் வைத்துத் தொழுகின்றூர்.
பனிபோல் வெள்ளே இதயத்தார்
பாடும் பாடல் கேட்கிலேயோ?
சனியாம் ஏழரை பீடித்தால்
8) தாயே! அரண்செய் உயிர்காத்து!

---

7) சந்நிதி — மதுரை மீனுட்சி அவளது கோயில் சந்நிதியில் காட்சி அளிக்கிறுள், அன்னே மீனுட்சி புது வயலில் 'உள்ள வீட்டில் ஓலேப் பேழையில் காட்சி அளிக்கிறுள்.

8) தாளில் —திருவடியில், காகிதத்தில்.

ஏழரை — ஏழரை நாட்டுச் சனியன் முதல் முறை கவிஞரைப் பீடித்திருந்தபொழுது கவிஞர் தன் தாயை இழந்தார். அதன்பின் ''டைபாய்டு'' காய்ச்சலில் சுமார் மூன்று மாதம் கிடந்து தாய் அருளால் உயிர் பிழைத்தார், இப்பொழுது இக்கவிதை எழுதும் பொழுதும் கவிஞர் ஏழரை நாட்டுச் சனியனுல் பீடிக்கப் பெற்று, மூல பவுத்திர வியாதியால் நொந்து வாடித் தேறுகிறூர்.

காத்துக் காத்துச் சலித்தாயோ?
கடைக்கண் வீச்சை வெறுத்தாயோ?
பார்த்துப் பார்த்துன் சந்நிதியில்
பலநா ளாய்த்தவம் கிடந்தோர்கள்
பூத்துப் பூத்துப் போவதுமோ?
புள்கண் ணில்ஒளி தாரோயோ?
சேர்த்துச் சேர்த்து வைத்ததெலாம்
9) செந்தமிழ் அன்றி வேறிலேயே!

இலேயே எமக்கோர் இனித்தெய்வம்
எங்கள் தாயே! மீனுட்சி
கலேயும் நீயே உலகத்தில்
கதியும் நீயே எங்கட்கு!
சிலேயாய் இருந்தே போவாயோ?
செந்தமிழ் கேட்க வாராயோ?
தலேயே தொழுதோம் வலம்வந்தோம்
10) தாயே! எமக்கருள் தாராயோ?

## இரண்டாம் பத்து

தாரா திருந்தால் தவிசுண்டோ?
தண்டமிழ் பாடத் தடையுண்டோ?
நாரா யிருந்தோர் அனைவர்க்கும்
நன்மா மலரே நீயன்றோ!
வாரா திருந்தால் வழக்குண்டோ?
வற்றாப் புனலே! மாமணியே!
சீரா யிருந்தெம் கவிதையிலே
11) சிந்தை குளிர்ந்தே சிரிப்பாயே!

சிரித்துக் கெடுப்பார் பலபேர்கள்
தீண்டிக் கெடுப்பார் சிலபேர்கள்
அரித்துக் கெடுப்பார் ஆயிரம்பேர்
அண்டிக் கெடுப்பார் பலகோடி
விரித்துக் கெடுப்பார் சிலநூறு
வெறுத்துக் கெடுப்பார் பலநூறு
உரித்துக் கெடுப்பார் இங்குண்டோ?
12) உலகத் தாயே! உரிப்பாயோ?

---

11 தவிசு—அரியாசனம்

உரித்தால் வாழ வழியுண்டோ?
உதிரக் கண்ணீர் வரலாமோ?
கரித்தால் அம்மா போக்குண்டோ?
கடைக்கண் எம்மை நோக்காதோ?
சிரித்தால் தாயே! குறையுண்டோ?
சினந்தால் தாயே! நிறையுண்டோ?
தரித்தால் உயிரும் உன்னுலே
13) தாயே! காப்பாய் மீனுட்சி!

மீனுள் என்றே உலகத்தார்
மேவிக் கூவித் தொழுகின்ருர்
கானுள் வேடர் முன்னேறிக்
காளத்தி யானேக் கண்டாலும்
வானுள் தேவர் பூமிக்கே
வந்தே நன்மொழி சொன்னுலும்
மேனுள் மூடர் கொள்ளார்கள்
14) மேலும் உன்முனர் நில்லார்கள்.

---

13) உதிரக் கண்ணீர் — இரத்தக் கண்ணீர்.
தாய் சிரித்தால் நமக்குக் குறையில்லே.
தாய் சினந்தால் நமக்கு நிறையில்லே.

14) காட்டை ஆளும் வேடனுகிய கண்ணப்பன் காளத்தி அப்பனேக் கண்டான். அது கண்டும் மூடர்கள் தெய்வத்தை நம்பவில்லே. தேவர்களே பூமிக்கு வந்து தெய்வத்தைப் பற்றிச் சொன்னுலும் மூடர்கள் நம்பமாட்டார்கள்.

நில்லார் எல்லாம் போனார்கள்
நிலையாய் இருப்பதுன் அருளம்மா!
கல்லார் என்று தள்ளாதே
கதியார் என்று கேளாதே
பொல்லார் என்று போக்காதே.
புரியார் என்று நீக்காதே
செல்லாக் காசுன் மடியேறும்
15) செகமே உன்னடி தொழுதேறும்.

தொழுதே றும்எனில் பழுதுண்டோ?
தோற்றம் மாற்றம் உனக்குண்டோ?
விழுதே றிப்பலன் தந்தவளே!
வெற்றிச் சங்கம் கண்டவளே!
அழுதே உன்னைப் பெறலாமே.
அம்மா என்றால் வரலாமே.
கழுதே! என்றே வைவாயோ?
16) கண்ணே! என்றுரை பெய்வாயோ?

---

15) மதுரை மீனாட்சிக்கு முன் வணங்கி நில்லாதவர்கள் எல்லாம் போன இடம் தெரியவில்லை.

16) கழுதே—கழுதை

பெய்தால் உன்றன் சந்நிதியில்
பிணிமூப் போடு வறுமையெலாம்
எய்தா தோடிப் போகாதோ?
எங்கள் வாழ்வும் பூக்காதோ?
கைதான் கூப்பும் வேளையிலும்
கண்கள் பார்க்கும் காலையிலும்
மெய்தான் விதிர்த்துன் எழில்காண
17) மேவித் தானருள் செய்வாயே!

செய்வாய் என்றே இதுகாறும்
சேவித் தோர்கள் பலகோடி!
கைவாய்க் கென்றே போராடும்
காலம் ஆதலின் உனைச் சற்றுத்
தொய்வாய் விட்டார் இருந்தாலும்
தொழிலால் மறந்தோர் இருந்தாலும்
உய்வாய் என்றே கடைக்கண்ணால்
18) ஒருநே ரம்நீ அருளாயோ?

---

18) கைவாய் — இன்று மக்கள் சம்பாதித்துக் கையால் வாங்கும் சம்பளம் வாய்க்குப் போதவில்லை. ஆகவே வறுமையால் சிலர் மீனாட்சியை மறக்கலாம். அல்லது தொழில் காரணமாக நேரமின்றி மறக்கலாம். அவர்களையும் மீனாட்சி உய்விப்பாள்.

அருளா திருந்தால் உய்வுண்டோ?
அருளிச் செய்தால் நைவுண்டோ?
இருளா யிருக்கும் பாதையிலே
ஏற்றம் போக்கும் போதையிலே
உருளா திருந்தால் உலகத்தார்
உண்மை வடிவம் காணுரோ?
சுருளா திருக்கும் பொய்ம்மையெலாம்
19) சுகமாய் ஆட்டம் போடுவதோ?

போடும் போலி வேடத்தால்
புன்மை எங்கும் புகழாக
ஆடும் ஆட்டம் காண்கிலேயோ?
அகமே கெட்டால் வாழ்வுண்டோ?
நாடும் பெரியோர் சான்ருேர்கள்
நலிந்தே போனல் நாடுண்டோ?
காடும் பூக்கச் செய்பவளே!
20) கண்கள் பூக்கச் செயல்நன்ருே?

---

19) இருள்நிறைந்த அறியாமைப் பாதையிலும், உயர்வு நீக்கும் போதையிலும் உலகத்தார் உருளாவிட்டால் மீனுட்சியின் உண்மை வடிவத்தைக் காணலாம். சுருண்டு அழியாத பொய்ம்மை இன்று சுகமாக ஆட்டம் போடுகிறது.

20) இன்று உலகில் போலி வேடமே தலைவிரித்து ஆடுகிறது. ஆதலால் சான்ருேர்கள் நலிந்துள்ளனர். காடு பூக்கலாம். ஆனல் கண்கள் பூக்கலாமா?

## மூன்றும் பத்து

நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானே அல்லற் படுவதுவே!
கன்றே என்றுண் மடிதாராய்.
கண்ணே என்றுன் மார்தாராய்.
சென்றே போன காலமெலாம்
செயலொன் றின்றிப் போனாலும்
இன்றே கலக்கம் போக்கிடவே
21) எழுந்தே விளக்கம் ஆக்கிடுவாய்.

ஆக்கல் காத்தல் அழித்தல்எலாம்
அம்மா உன்செயல் ஆனாலும்
நோக்கல் கூடா தென்றிமையை
நொடியும் திறவா திருப்பாயோ?
தாக்கல் நாற்றிசை வந்தாலும்
தடைகள் நாடொறும் தந்தாலும்
காக்கல் உன் இரு கண் அளியே!
22) கனிவும் உன்அருந் தண் அளியே!!

---

22) அளி — இரக்கம், கருணை.

தண்ணளி யாலே இதுகாறும்
 தாரணி ஓங்கச் செய்தவளே!
பெண்ணர சாளும் மங்கையரால்
 பேரர சான பூமியிலே
விண்ணர சோங்கச் செய்தவளே!
 வியனருள் ஓங்கப் பெய்தவளே!
மண்ணர சோங்கப் புரந்தந்து
23) மாதர சாகிப் பொலிவாயே!

பொலிவாய் வலிவாய் உலகத்தில்
 போற்றும் அறங்கள் பூத்திடவே
தெளிவாய் வான்மொழி தந்திடுவாய்
 தேறும் மானுடம் ஆகிடுவாய்
அளிவாய் பாடும் பூமாலே
 அரன்வாய் பார்த்தே நின்றுலும்
துளிவாய் பாடும் எங்கட்கும்
24) துணிவாய் நாளும் நல்காயே!

---

23) பாரதத்தில் தேவ அரசு ஓங்கச் செய்தவள் மீனுட்சி.
புரம்தந்து—பாதுகாத்து

24) வான்மொழி—அசரீரி
உலகில் அறங்கள் பெருக மீனுட்சி அசரீரி கூற வேண்டும். அவள் மீண்டும் மனித வடிவம் எடுக்க வேண்டும்.
அளி—வண்டு அரன்—சிவன்
துளிவாய்பாடும்—சிறுசிறு கவிதைத்துளிகளைப் பாடும்

நல்கா யானுல் நாயகியே!
 நாதம் உண்டோ நாவினிலே?
செல்கா தங்கள் பலகோடி!
 சேவை செய்யத் துறைகோடி!
கொல்வா ரெங்கும் பலகோடி!
 கோழை நெஞ்சம் பிறகோடி!
வெல்வா ருண்டோ நீயின்றேல்?
25) வீரம் ஈரம் உனதன்றோ!

உனதே ஐம்பெரும் பூதங்கள்
 ஒண்ணித் திலமே! வாய்திறவாய்
எனதே எனதே என ஏங்கும்
 ஈனப் பிறவித் துயரெல்லாம்
மனதே போடும் புள்ளிகளால்
 மதிகெட் டிடுமோர் கோலங்கள்.
தனதே இல்லை என்பார்க்குத்
26) தடையே இல்லை தாயே வா!

---

25) செல்கா தங்கள் — செல்ல வேண்டிய தூரங்கள். மனிதன் செல்ல வேண்டிய தூரம் பல கோடி. அவன் சேவை செய்யத் துறைகளும் பல கோடி. ஆனுல் கொல்வார் பல கோடி. கோழைகள் பிற (மிஞ்சிய பல) கோடி.

26) ''எனது'' ''எனது'' என்பதால் வரும் துயரங்கள் மனம் போடும் புள்ளிகளால் மதிகெட்டு வரும் கோலங்கள் ஆகும், ''நான்'' ''எனது'' என்பதை நீத்தவர்க்குத் தாய் வரத் தடையில்லை.

தாயே வாவா என்றாலும்
  தமிழே வாவா என்றாலும்
நாயேன் சொல்லும் பாடலிலே
  நாதம் உண்டோ என்பாயோ?
சேயேன் என்னிரு கண்ணுக்குள்
  செந்தா மரையாய் வந்தவளே!
தூயேன் என்சிறு நாவுக்குள்
27) தொல்காப் பியமாய் வந்தவளே!

வந்தவ ளேஎன் வீட்டுக்குள்
  வளர்பொற் கிழியாய் வாழ்பவளே!
கந்தனை என்றன் நயனத்தில்
  கண்மணி யாகச் செய்தவளே!
வந்தனை கூறிப் பாடுகிறேன்
  வளர்மலர் தூவித் தேடுகிறேன்
சிந்தனை எல்லாம் உனதன்றோ!
28) செயலெலாம் உன்றன் பரிசன்றோ!

---

28) 1973 ஆம் ஆண்டில் மதுரை மீனாட்சி அம்மன் கோயிலார் நடத்திய பொற்கிழிக் காவியப்போட்டியில் ''பாண்டிமாதேவி'' என்னும் காவியத்தினை எழுதி இருபதாம்நூற்றாண்டில் முதற்பொற்கிழியினைக் கவிஞர் அரு.சோமசுந்தரன் தமிழக முதலமைச்சரிடம் இருந்து பெற்றார். பொற்கிழிப் பரிசு ரூ1001—00

பரிசுகள் தந்தாய் பலகோடி
பண்புகள் தந்தாய் பலதேடி.
வரிசையாய் நோயும் துன்பமெலாம்
வந்திட என்ன தவறிழைத்தோம்?
தரிசனம் தேடி வந்தவர்க்குத்
தறிசுகள் நிலமாய்த் தருவதுண்டோ?
பரிசுகள் தந்துன் அருள்மழையைப்
29) பாரகம் எங்கும் பொழிந்திடுவாய்.

பொழிந்திடு வானில் முகிலானுய்,
பூத்திடு கானில் அகிலானுய்.
அழிந்திடு விறகில் அக்கினி நீ!
ஆடிடு மேடையில் பொற்கிழி நீ!
இழிந்திடு மருவியில் தீர்த்தம் நீ!
இயலிசை நாடகம் அனைத்தும் நீ
வழிந்திடு பாலபி ஷேகத்தால்
30) வையயின் தாயே! வணங்குகிறோம்.

---

30) பொற்கிழி : சங்க காலத்தில் பாண்டியர் பேரவையில் பொற்கிழி (பொன் முடிப்பு) உயரக் கட்டித் தொங்கவிடப் பெற்றிருக்கும். சரியாகப் பாடியவர்க்குப் பொற்கிழி தானே அறுந்து விழும்.

## நான்காம் பத்து

வணங்கிட மனிதப் பிறவியினை
வாழ்த்தொலி யோடு தந்தவளே!
சுணங்கிட என்ன காரணமோ?
சுகம்தர என்ன தாமதமோ?
அணங்கென உன்னைத் தொழுவதுவும்
அழுதிரு கண்கள் பொழிவதுவும்
குணங்களி கூரப் பாடுவதும்
31) கோபுர மாகக் கொழிதமிழே!

கொழிதமி ழாலே பூமாலை
கோத்திடு கின்றேன் பாமாலை
வழிபுனல் காவிரி வையையெலாம்
வறுமையில் என்இரு கண்தருமே!
ஒழிகெனப் போடும் முழக்கங்கள்
ஒண்டமிழ் வானில் இடியன்றோ!
வழிகளைக் காட்டி நடத்திடவே
32) வையையின் தேவி வாராயோ?

---

31) சுணங்கிட—தாமதிக்க

வாரா யோஎன வாடுகிறேன்.
வறியேன் பிள்ளைத் தமிழ்கேட்டுத்
தாரா யோஎனத் தாழுகிறேன்.
தனியேன் என்றன் தமிழுக்குள்
சேரா யோஎனச் சேவித்தேன்.
செகமே உன்றன் வீச்சுக்குள்
நாராய்ப் பூட்டிக் கண்ணசைத்தால்
33) நாயேன் ஒருநொடி தாங்குவனு?

தாங்க எனக்குத் திறமில்லை.
தரையில் நிற்கும் உரமில்லை.
வாங்கக் கொடுக்கும் கரமில்லை.
வாழ்ந்தே போக வரமில்லை.
ஓங்கத் தொழிலும் தரமில்லை.
உழைத்தே வாழ அறமில்லை.
ஏங்கத் தான் நீ வைப்பாயோ?
34) ஏச்சும் பேச்சும் துய்ப்பாயோ?

---

34) உரம்—வலிமை
எனக்கு வரும் ஏச்சும் பேச்சும் தாயே! உனக்குத் தானே சேரும்.

துய்த்தேன் இத்தனை காலம்நான்
 தொண்டுக் கோடித் துவண்டேனே
பொய்த்தேர் பின்னே போனதிலே
 புகழ்த்தேர் என்றே பொங்கவிலே
உய்த்தேன் என்றொரு சொல்லுக்கே
 ஊழிக் காலம் உன்னடியில்
கைத்தா ளங்கள் போட்டிடுவேன்
35) கனிவாய் ஒருசொல் சொல்லாயோ?

சொல்ஒரு கோடி; பயில்கின்றேன்.
 சுமைஒரு கோடி துயில்கின்றேன்.
அல்ஒரு கோடி ஆனாலும்
 அறிவொரு கோடி போனாலும்
கல்ஒரு கோடி கண்டாலும்
 கடையொரு கோடி நிற்பவனை
வில்ஒரு கோடிப் புருவத்தால்
36) விழிஒரு கோடி தருவாயே!

---

35) பொய்த் தேர்—கானல்நீர்

36) கோடிக்கணக்கான சொற்களும் பொருள்களும் இருந்தாலும் பயிலும் பாலக நிலையில் உள்ளேன். ஏராளமான சுமை இருந்தாலும் கவலையின்றித் தூங்குகிறேன். வாழ்க்கையில் இரவுகள் எத்தனை கோடி இருந்தாலும் அறிவு பலகோடி மறந்தாலும், சோதனைக் கற்கள் எத்தனை கோடி தோன்றினாலும் சற்றும் முன்னேறாது அறியாமைக்கோடியில் நிற்கும் என்னை, வில் போன்ற வளைந்த புருவத்தால விழி அசைத்துக் கடைக்கண் பார்; தாயே!

தருவா யேஎனத் தவிக்கின்றேன்
தழல்வா யேதினம் கண்டஎனை
வெறுவா யோடு போகஎன
விடுவா யோஎனப் பொறுமுகிறேன்.
கருவா யோகம் துயின்றமுதல்
கடைவா யோகம் பயின்றவரை
வருவா யோகம் வரைந்தவளே!
37) வரமா யோகம் வார்ப்பாயே!

வார்ப்புகள் எத்தனை எத்தனையோ?
வளர்ப்புகள் எத்தனை எத்தனையோ?
சீர்ப்புகழ் பாடும் தேவாரம்!
சிந்தைகள் நாடும் வாசகங்கள்!
தேர்ப்புகழ் சொல்லித் திரிவதுவோ?
தேன்பிலி மலர்கள் விரிவதுபோல்
ஈர்ப்புகழ் இல்லா உலகத்தில்
38) எத்தனை காலம் திரிவதுவே?

திரிந்தது போதும் மலரவிடு
　　தேர்ந்தது போதும் வளரவிடு
அறிந்தது போதும் அகலவிடு
　　அளந்தது போதும் புகலவிடு
உரிந்தது போதும் உயரவிடு
　　உடைந்தது போதும் அயரவிடு
கறிந்தது போதும் கவரவிடு
39) கழன்றது போதும் சேரவிடு

சேரவே வந்துன் சந்நிதியில்
　　செங்கம லத்தாள் தொழுகின்றோம்
பாரமோ நாங்கள் உன்னடியில்
　　பாவமோ நாங்கள் செய்தறியோம்
சாரமோ இல்லை வாழ்க்கையிலே
　　சஞ்சல மோதினம் கொஞ்சமில்லை
ஈரமோ நின்னிரு விழிக்கில்லையோ?
40) இதயமோ தண்ணருள் துளிர்க்கலையோ?

## ஐந்தாம் பத்து

துளிர்க்கவே வந்துன் தாள்தொழுதோம்,
தொண்டருள் எம்மைக் கூட்டுகண்டாய்
ஒளிக்கவே எண்ணும் உலகமிதில்
ஒப்புர வாளர் இருப்பதனுல்
களிக்கவே நெஞ்சுக் கிடமுண்டு
காத்தருள் இவரைத் தேடியம்மா!
விழிக்கவே செய்யும் பாமரரை
41) விருந்தென எண்ணிக் காத்திடுக!

காத்திடு தற்குக் கால்நடையாய்க்
கையிரு கூப்பிக் கண்சிந்திப்
பார்த்தொரு கோடி நிற்கின்ருர்
படித்தொரு கோடி பரவுகிருர்,
வேர்த்தொரு கோடி வெதும்புகிருர்.
விளக்கொரு கோடி ஏற்றுகிருர்
ஆர்த்தொரு கோடி எதிர்நின்ருர்
42) அடைத்தொரு கோடி போட்டாயே!

---

41) ஒப்புரவாளர்—பேரறம் புரிவோர்

போட்டது தாயே ஆனாலும்
பொறுமையின் சிகரம் நீயேதான்.
கேட்டது தந்து காப்பாய் நீ
கேண்மையில் நல்ல தோப்பாவாய்.
பாட்டது கேட்டு நடைபோட்டுப்
பச்சிளங் குழந்தை ஆவாய் நீ.
வேட்டது தந்து வலம்தந்து
43) வெம்பகை போக்கி வினைதீர்ப்பாய்.

வினைகள் தீர்க்க வந்தவளே!
வெங்கொடு மைப்பிணி தீர்ப்பவளே!
கணைகள் எத்தனை வந்தாலும்
காலன் பந்தடி நின்றாலும்
புணையாய் நின்றெமை உயிர்பேணிப்
புண்ணில் மருந்தாய்க் காத்தவளே!
அணையா உலகில் அன்னாய் நீ
44) ஆதர வின்றேல் என்னாகும்?

---

43) கேண்மை — நட்பு. வேட்டது — விரும்பியது.
வெம்பகை — கொடிய பகை

44) கணைகள் — அம்புகள், சோதனைகள்.
காலன் — எமன். புணை — தெப்பம்.

என்னு கும்ளனில் தெரியாதே.
எளிதா கச்சொல முடியாதே.
புன்னு கங்கள் மத்தியிலே
பூநா கங்கள் படம்காட்ட
இன்னு ரென்றே தெரியாமல்
இயல்பொன் றேதும் புரியாமல்
கன்னு பின்னு வாழ்வோர்க்குக்
45) கைகள் நீட்டிக் கரைசேர்ப்பாய்.

கரைகள் சேர்க்கும் கலங்கரையே!
கண்ணீர் விடுவோர் வழிகாட்டி!
உரைகள் இல்லை, பேச்சில்லை
ஊமை வாயர் என்றாலும்
திரைகள் உள்ளே விழிகாட்டித்
தினமும் காக்கும் தேவதையே!
அறைகள் உள்ளே ஆடுகிறோம்
46) அம்பலத் திற்கே அழைப்பாயே!

---

46) திரைகள்—மனத்திரை

அழைப்பாய் என்றே இதுகாறும்
அம்மா சேவை செய்தேமைப்
பிழைப்பாய் என்று பாராட்டிப்
பிள்ளாய் என்று தாலாட்டி
விளைப்பாய் என்று விரல்காட்டி
விருப்பாய் நல்ல மொழிகாட்டித்
தழைப்பாய் என்று தமிழ்காட்டித்
47) தந்தாய் நல்ல பொற்பேழாய்!

பேழைக் குள்ளே மாமணியே!
பேணிக் காக்கும் மங்கலமே
ஏழைக் கிட்ட திரவியமே!
இதயத் திற்குள் நவரசமே!
வாழைக் குலமாய்க் காப்பாயே!
வற்ருச் செல்வம் வளர்ப்பாயே!
தாழைப் பூவாய் மணப்பாயே!
48) தண்டமிழ் கேட்டுச் சிரிப்பாயே!

---

47) பொற் பேழாய்! — பொற் பேழைக்குள் வாழ்பவளே!

சிரிப்பைக் கேட்கும் வாய்ப்பிலையோ?
சிந்தைக் குள்ளே செல்வம்நீ!
உரிப்பாய் என்றே பகைவரெலாம்
உவப்பாய் வந்துன் முன்நின்றூர்
குறிப்பாய் பாண்டியர் பாராட்டக்
கோபுர மாகி வளர்ந்தவளே!
விரிப்பாய் என்றே ஆணையிடின்
49) வேதம் என்மொழி ஆகாதோ?

ஆகா துண்டோ உன் அவையில்?
அன்றே பெரும்புகழ் நக்கீரன்
பாகாய் நன்மொழி பாடியதும்
பரம்பொருள் அவன்முனர் ஆடியதும்
சாகா வரம்தரு கதையலவோ?
சத்தியம் காக்கும் விதையலவோ?
நோகா திருக்கச் செய்தாயே!
50) நோய்நொடி நீக்கி உயிர்காப்பாய்!

---

49) விரிப்பாய்—உன் கதையை விரித்துரைக்கும்படி நீ கூறினுல்

50) நக்கீரன்—பொற்கிழி குறித்து நக்கீரருக்கும், பரம் பொருளான சிவபெருமானுக்கும் இடையே நிகழ்ந்த கதை

## ஆறும் பத்து

உயிரைக் காக்க வேண்டும்அம்மா!
உன்அருள் தனைஎது தாண்டும் அம்மா?
பயிரைக் காக்கும் முகிலானாய்
பழவினை போக்கும் உயிலானாய்.
வெயிலைத் தேக்கும் குடையானாய்
வெற்றி கொடுக்கும் படையானாய்
துயிலைப் போலொரு சுகமுண்டோ?
51) துணிவைப் போலொரு திறமுண்டோ?

உண்டோ எனஅருள் தேடுகிறோம்
ஓடி ஆடிப் பாடுகிறோம்
கண்டோர் யாரையும் காணவில்லை
கற்றோர் பொருளுரை தேறவில்லை
தண்டோ ராக்கள் போடுபவர்
தன்னிலை இன்னும் உணரவில்லை
விண்டோர் உரைநீ விளம்பாயோ?
52) வீதி மணலில் கிளம்பாயோ?

---

51) உயில்—வாழ்க்கை முறி. துயில்—தூக்கம்

52) கண்டோர்—கடவுளைக் கண்டோர்
தேறவில்லை—ஆராயவில்லை
தண்டோராக்கள் போடுபவர்—தம்மைப் பற்றித் தம்பட்டம் அடித்துக் கொள்வோர்
விண்டு—புரியுமாறு விளக்கி

கிளம்ப வேண்டும் தாயே! உன்
　　கீர்த்திப் பாமலர் தூவுகிறேம்
விளம்ப நாவில் தெளிவில்லே
　　விழியில் பேறருள் துளியில்லே
அலம்பும் சிந்தனைத் தூளியிலே
　　அம்மா நீஇனும் தூங்குவதோ?
புலம்பும் என்மொழி கேளாயோ?
53) 　　புராணம் என்றிதை ஏலாயோ?

ஏலா திருந்தால் எளியேனின்
　　இதயம் நிறைவதும் எப்போது?
சூலாய் நீவரின் பாலேயுண்டோ?
　　கனலாய் நீவரின் பனியுமுண்டோ?
கோலாய் நீவரின் கொடுமையுண்டோ?
　　கொம்பாய் நீவரின் வெம்பலுண்டோ?
தாலாய் நீவரின் தாழ்வுமுண்டோ?
54) 　　தாயே! நீயருள் செய்வதென்றே?

---

53) பேறருள்—அதிர்ஷ்டம்
　　தூளி—தொட்டில்

54) காலாய்—நடக்கும் காலாக, வாய்க்காலாக,
　　கனலாய்—வெப்பமாய்
　　கோலாய்—செங்கோலாய்
　　கொம்பாய்—கிளேயாய்
　　தாலாய்—தாலாட்டாய்

என்றோ உன்மொழி செவிகேட்பேன்?
ஏலக் குழலிஉன் நடைபார்ப்பேன்?
நன்றோ நீஎமைச் சோதித்தல்?
நகைமுகம் இன்றிச் சாதித்தல்?
குன்றோ எமதுடல் பிணிவைத்தால்?
கொழிகட லோமனம் அலைவைத்தால்?
இன்றோ ரிடையூறு எமக்குண்டோ?
55) எல்லாம் உன்செயல் அம்மம்மா!

அம்மம் மாஎன அழுகின்றோம்.
அருவிக் கண்ணீர் பொழிகின்றோம்.
தும்மல் இருமல் வரும்போதும்
தொழில்கள் செய்தே எழும்போதும்
செம்மல் எனப்பிறர் சொலும்போதும்
சேவைக் கென்றே செலும்போதும்
அம்மா உனைத்தான் அழைக்கின்றோம்
56) அறியா திருப்பதா உன்நீதி?

---

55) இடையூறு—துன்பம்
செம்மல்—தலைவன்

நீதிக் கென்றும் துலையாஞய்
நீசர்க் கென்றும் சிலையாஞய்
ஊதிப் போடும் திறம் கொண்டாய்
உன்னைப் பாடும் வரம்கொண்டேன்
பாதிப் பின்றி நோய்நீக்கிப்
பலமும் எழிலும் பொருள்தந்து
சோதிச் சுடராய் ஒளிசெய்வாய்
57) சொல்மலர் தூவித் தொழுகின்றேன்

தொழுகின் றேன்நான் தினந்தோறும்
தோற்றம் நீஇனும் தரவில்லை
அழுகின் றேன்நான் கவிபாடி
அசரீ ரிஎதும் கேட்கவிலை
விழுகின் றேன்உன் சந்நிதியில்
விடைமேல் ஏறி வந்ததிலை
எழுகின் றேன்நான் உனதாணை
58) எனதிரு விழியும் நீதானே!

---

57) துலை—தராசு முள்
ஊதிப் போடுதல்—தீயவர்களை மீஞட்சி எளிதாக அழித்து விடுவாள். (கவிஞரின் பவுத்திர நோயின் வேர் நாட்டு மருத்துவரால் ஊதி எடுக்கப் பெற்ற பொழுது இப்பகுதிகள் கவிஞரால் படுக்கையில் இருந்தவாறு எழுதப் பெற்றன)

58) விடை—காளை வாகனம்

நீதான் என்னைப் பெற்றிங்கே
நெடும்பய ணத்தில் விட்டாலும்
சாதா வாகிப் பதருமல்
சக்கையு மாகிச் சிதருமல்
சோதாவாகிப் பணியாமல்
சோடையு மாகிக் குனியாமல்
சூதால் வாழ்க்கையில் நலியாமல்
59) சுடரொளி யாகச் செய்தவளே!

செய்தவ ளேஉன் முகம்காட்டு
செந்தமிழ் பொழியும் வாய்காட்டு
பெய்தவம் பேணும் தாள்காட்டு
பேரருள் பொழியும் விழிகாட்டு
உய்தவம் செய்யும் வழிகாட்டு
உத்தம மாகும் மொழிகாட்டு
நெய்தவள் நீயே சிக்கலின்றி
60) நேர்த்தியாய் வாழ வழிகாட்டு

---

59) சோதா—கோழை

60) தாள்—திருவடி

## ஏழாம் பத்து

வழியினைக் காட்டத் தாமதமா?
வறுமையும் நோயும் வதைபடவே
விழியினைக் காட்டி அருள்செய்ய
விளக்கொளி காட்டி வாதாயே!
பழியிலா வாழ்க்கை கொடுத்தவளே!
பாத யாத்திரை விடுத்தவளே!
பொழிகரு ணைக்கோர் மேகம்நீ!
61) புதையருள் வேட்கும் தாகம்நான்.

தாகமாய்த் தேவிஉன் தாள்பணிந்து
தமிழமு தத்தில் தோய்ந்ததுவும்
வேகமாய் உன்பெருங் கோயிலுக்குள்
வேதம் முழங்கி வந்ததுவும்
ஆகமம் வாழும் சந்நிதியில்
அம்மா எனக்குரல் எழுப்பியதும்
சாகசம் என்று எண்ணுகிறாய்?
62) சத்தியம் வாழும் நெஞ்சமிது!

---

61) பாத யாத்திரை—கடவுளை வழிபடப் பலர் பாத யாத்திரை செல்கின்றனர். மதுரை மீனாட்சியையும் பலர் பாத யாத்திரையாக வந்து வணங்குகின்றனர். கவிஞர் அரு. சோமசுந்தரன் முருகனின் ஆறுபடை வீட்டுக்கும் தேவகோட்டையில் இருந்து தன் மனைவி யுடன் பாதயாத்திரையாக ஆயிரம் மைல் நடந்து சென்று வழிபட்டார்.

நெஞ்சமே கோயில் என்ருலும்
நித்தில மாய்நீ வாழுகிருய்
கொஞ்சமோ உன்னைப் பாடியதும்
கோயிலில் வலமாய்த் தேடியதும்
தஞ்சமாய் உன்பதம் சூடியதும்
தமிழ்மறை கேட்டே ஆடியதும்
அஞ்சனம் எழுதிய கண்இமையே
63) அரைநொடி திறந்தால் தெரியாதா?

தெரியா ததுவும் இங்குண்டோ?
தென்னு டுடைய சிவன்தேவி!
விரியா மலரால் மனமுண்டோ?
விளையாப் பயிரால் பலனுண்டோ?
தெரியா விழியால் ஒளியுண்டோ?
தெளியா அறிவால் வழியுண்டோ?
குறியாய் உன்னைச் சரணுற்ருேம்
64) கோலக் கிளியே! மொழிபேசாய்

---

63) நித்திலம்—முத்து

பேசாக் குமரன் குருபரனைப்
பிள்ளைத் தமிழைப் பாடுகையில்
ஆசா பாசம் இல்லாநீ
அன்னைத் தமிழாய் அதை ஆக்கக்
கூசா மல்நீ தளர்நடையாய்க்
குழந்தை வடிவில் வந்ததெலாம்
ஆசா ரந்தான் என்றாலும்
65) அம்மா அக்கதை மீளாதோ?

மீளா ததுமோர் சரித்திரமா?
மேன்மக் களென எமையாக்கிக்
கேளாக் கவியெலாம் கேண்மையுடன்
கேட்டிடத் தளர்நடை இட்டுவரின்
தூளாய்க் கிடப்பவர் கவிதையெலாம்
தொல்காப் பியமாய் ஆகாதோ?
வாளாக் கிடப்பவர் வாழ்க்கையெலாம்
66) வையைப் புனலாய் வளராதோ?

---

65) பேசாக்குமரன்—குமரகுருபரர் ஊமையாய் இருந்து திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் அருள் பெற்றார். மதுரை மீனாட்சி அம்மன் சந்நிதியில் திருமலைநாயக்கர் முன்னிலையில் குமரகுருபரர் 'மீனாட்சி அம்மன் பிள்ளைத் தமிழ்' பாடுகையில் 'வருகைப் பருவத்தின்'போது மீனாட்சி மூன்று வயதுக் குழந்தையாய்ச் சந்நிதியில் இருந்து ஓடிவந்து நாயக்க மன்னரின் முத்துமாலையைக்கழற்றிக்குமரகுருபரருக்கு அணிவித்தாள்

66) வாளா—வீணே

வளரா ததுமோர் பொருளாமோ?
வற்ருச் சுடரே! அருட்புனலே!
தளரா நெஞ்சம் தந்தவளே!
தமிழும் கொஞ்சம் தந்தவளே;
உளரு மல்நீ கிடக்கவென
உலகத் தார்பழி சொன்னுலும்
அலரு மல்நான் நிற்பேனு?
67) அம்மா வின்முகம் மறப்பேனு?

மறப்பேன் இந்த வையமெலாம்
மகனே! என்றெனை அணைப்பாயேல்,
துறப்பேன் சொத்துத் தொகையெல்லாம்!
தொடரும் பிறவித் துயர்நீக்கித்
திறப்பேன் தேவி! நீவாழும்
தெய்வக் கோவில் திருக்கதவம்!
''சுரப்பேன் அருளா ரமுதம்'' எனச்
68) சொல்லித் தாயே! வருவாய்நீ.

வருவாய் எனக்கு நீயேதான்
　　வையை நீரில் ஆடியதும்
உருவாய்த் தழலில் குழவியென
　　ஓர்நாள் நீமுன் தோன்றியதும்
குருவாய் வந்த குழந்தைக்குக்
　　கொற்கை முத்தைக் கொடுத்ததுவும்
கருவாய் வந்தது முதல்அறிவேன்.
69)　　கலைமா மதுரைக் கண்மணியே!

கண்ணே! மணியே! மீனாட்சி!
　　கலையே! அலையே! காமாட்சி!
விண்ணே! சுடரே! விசாலாட்சி!
　　வெயிலே! மழையே! நீலாட்சி!
பண்ணே! இசையே! பழந்தேவி!
　　பயிரே! உயிரே! பாண்டியர்கள்
பெண்ணே! அரசி! மீனாட்சி!
70)　　பேசா மடந்தை யாரம்மா?

---

69) வருவாய்—தோன்றுவாய், வருமானம்
தழலில் குழவி—மீனாட்சி மூன்று வயதுக்குழந்தையாய் நெருப்பில் தோன்றினாள்
குரு—குமரகுருபரர்

## எட்டாம் பத்து

யாரைக் கண்டென் குறைசொல்வேன்?
யமுனைக் கரையான் தங்கையுனைக்
காரைப் பிழியும் சடைக்கற்றைக்
கங்கைக் கரையான் மணங்கொள்ள
வாரைக் கீறும் வளர்குரும்பை
வையைக் கரையான் ஆனதனல்
பாரைக்காக்கும் தாயேநான்
71) பாலக் கரையான் ஆகின்றேன்

ஆகின் றேன்நான் உன்னாலே
அச்சம் மிச்சம் எதுமில்லை
பாகின் நேர்மொழி இல்லையெனப்
பாட்டும் பெரிய தொல்லையென
ஏகின் தாயே! என்செய்வேன்?
என்னால் இயன்றதும் இதுதானே!
கோகி னூரின் வயிரங்கள்
72) கொட்டி அளக்க எனக்குண்டா?

---

71) யமுனைக்கரையான் தங்கை—யமுனைக்கரையில் பிறந்த கிருஷ்ண பரமாத்மாவின் தங்கை மீனாட்சி
காரைப் பிழியும் சடைக்கற்றை—கருமேகத்தைப் பிழிந்த கருஞ்சடைத் தொகுதி
கங்கைக்கரையான்—சிவன்
வையைக் கரையான்—வையைக் கரை மதுரையில் சிவன் மீனாட்சியை மணந்து அமர்ந்தார்
பாலக்கரையான்—பாலப்பருவத்தில் உள்ளவன்

72) பாகு—வெல்லப்பாகு ஏகின்—சென்றால்
கோகினூர்வயிரம்—மிக விலையுயர்ந்த வயிரம்

உண்டா என்றதும் அம்மாநீ
உயரும் கோபுரம் காண்கின்றாய்
அண்டா வாங்கிட முடியாதான்
அலையை வாங்கிடல் எவ்வாறு?
மண்டா யிருந்தவன் விஞ்ஞான
மதியைப் பெற்றிடல் எவ்வாறு?
தொண்டால் உன்னைப் பெற்றிடவே
73) தொத்தித் தொத்திச் சோர்கின்றேன்

சோர்கின் றேன்எனைக் காப்பாற்றச்
சொக்கே சன்மனை வந்தவளே!
ஊர்கின் றேன்நான் சீர்காழி
உயர்சம் பந்தன் ஆகவிலை
தேர்கின் றேன்நான் யாவையுமே
திருநா வுக்கர சாகவிலை
ஆர்கின் றேன்நான் இல்லறமும்
74) ஆரூ ரன்பே றடையவிலை

---

74) ஆரூரன்—சுந்தரமூர்த்தி நாயனார்.

அடைய விலையே ஆனாலும்
அம்மா! உன்னருட் சோதிமுகம்
கடையேன் காண வழிசெய்தால்
கடைக்கண் பார்வை ஒளிசெய்தால்
படையே வரினும் எதிர்நிற்பேன்
பகையே உறினும் பணிசெய்வேன்
தடையே வரினும் தவறிழையேன்
75) தமிழே அறியச் சபதமிது!

இதுவும் அதுவும் எதுவொன்றும்
இயல்பாய் அறிய மாட்டேனை
மெதுவாய்த் தமிழால் மொழிஊட்டி
மேலாம் அருளால் அறிவூட்டிப்
பொதுவாய் திறமை கற்பித்துப்
பொழியும் புலமை சேர்ப்பித்துப்
புதுவாய் வந்தன காண்பித்துப்
76) போரா டத்தான் விட்டவளே!

விட்டவ ளேஎன் நற்ருயே!
    வினைப்பய ஞலே வாழ்க்கையிலே
பட்டதெ லாமினிப் போதாதா?
    பாரம் சுமந்ததும் தீராதா?
கட்டங்க ளெத்தனை அதனுலே
    கண்ணீர் வற்றிய தறியாயோ?
கொட்ட மடித்திடும் நோயாலே
77)    கோழைக ளாவதும் சரிதாஞ?

சரிதா ஞஎனக் கேட்டாலும்
    சக்தியே! நான்உனைத் தொழுதாலும்
அரிதா கத்தான் வந்தபிணி
    ஆட்டிப் படைத்திட அழுகின்றேன்
நரிதா ஞேஒரு பரியாக
    நன்மா ணிக்க வாசகரால்
பெரிதா கத்தான் செய்தவளே!
78)    பிணியை நீக்க முடியாதா?

---

77) கட்டங்கள்—துயரங்கள்

78) பிணி — மூலபவுத்திர நோய்— கவிஞரைப் பெருந் தொல்லைக்கு ஆளாக்கி விட்டது

முடியா ததுமோ உனக்குண்டு?
முயலும் நாயை விரட்டிடுமேல்
செடியாம் பிணியைத் தூர்நீக்கிச்
சிதைக்கத் தேவி! அருள் செய்வாய்.
துடியாய் வாழும் உலகத்தில்
துவளும் கொடியாய் விடலாமா?
படியாய்க் கிடந்துன் பணிசெய்வேன்.
79) பச்சைக் கிளியே! பாலூட்டு

பாலூட் டித்தான் உயிர்காத்துப்
பழமூட் டித்தான் அருள்தந்து
தாலூட் டித்தான் தமிழ்தந்து
தரமூட் டித்தான் சால்பாக்கிக்
காலூட் டத்தைத் தந்தவளே!
கையா ரத்தான் உழைத்திடவே
மேலூட் டத்தைத் தந்தவளே!
80) மெய்ஞ்ஞா னத்தைத் தந்திடுவாய்

---

79) முயல் × நாய்—பாஞ்சாலங்குறிச்சியில் முயல் நாயை விரட்டியது.

செடியாம்பிணி—மூலபவுத்திர நோய் ஒருசெடி போல வேர் கொண்டிருக்கும் நோய்

80) சால்பு—உயர்குணம்.

## ஒன்பதாம் பத்து

தந்திடு வாயே மீனுட்சி!
தமிழ்மா மதுரைத் தாயேநின்
செந்திரு மேனி எழில்கண்டும்
செவ்வரி படரும் விழிகண்டும்
சிந்துரத் திலக நுதல்கண்டும்
சிரிப்பினை உமிழும் இதழ்கண்டும்
வந்தனை கோடி செய்யாமல்
81) வாழ்வதும் இங்கோர் வாழ்வாமோ?

வாழ்வினை வாழத் தெரியாமல்
வையகம் தானும் புரியாமல்
சூழ்வினை ஏதும் செய்யாமல்
சொத்தினை ஈட்டி உய்யாமல்
கோள்நிலை நெஞ்சில் கொள்ளாமல்
கொள்கையும் சிறிது தள்ளாமல்
ஆள்நிலை கண்டும் அணுகாமல்
82) அன்னையே நின்பதம் சதமானேன்

---

82) கோள்நிலை—கிரகங்களின் நிலை.
ஆள்நிலைகண்டும் அணுகாமல்—காக்காய்பிடிக்காமல்

சதமா னேன்நான் தாயேநின்
சத்திய விளக்கின் ஒளிஎங்கே?
பதமா னேன்நான் தாயேநின்
பண்பா டுமிழும் மொழிஎங்கே?
மதமா னேன்நான் புகழாலே!
மாதா நின்திரு வடிஎங்கே?
விதமா னேன்நான் பலவாறுய்
83) வெற்றித் தாயே! காப்பாற்று

காப்பாற் றம்மா மீனுட்சி!
கலைமா மதுரைத் தாயேநான்
பூப்போட் டுன்னைப் போற்றுகிறேன்
பொற்ரு மரைநீர் ஆட்டுகிறேன்
நாப்போற் றும்நான் கரந்தாலும்;
நடைபோ டும்கால் மறந்தாலும்;
பாப்போற் றும்நூல் பலயாத்தே
84) பாண்டியர் தேவி பதம்வைத்தேன்

---

83) சதம்—நீயே கதி. மதம்—ஆணவம்
விதம்—பலவித முயற்சி

84) கரந்தாலும்—கதவு (மறைவு) செய்தாலும்
மறந்தாலும்—நான் மறந்தாலும், நா மறவாது. கால் வலம் வர மறவாது

வைத்ததும் தாயே கொள்வாயோ?
வளர்பொற் றுமரைப் பொய்கையிலே
கைத்தலம் ஏந்தி விடுவாயோ?
கடைப்பெரும் சங்க காலத்தை
உய்த்ததும் வள்ளுவர் குறளம்மா!
உயர்திரு சங்கப் பலகையிலே
85) வைத்திடு வாய்என் கவிதைகளை,
வண்டமிழ்த் தாயிரு கையாலே!

கையா லேளனை ஏந்தாயோ?
கனிவாய் உச்சி மோந்தம்மா
பொய்யா மறையெலாம் புகலாயோ?
பொழிகரு ணைக்கண் நீராட்டிப்
பெய்யாத் திருவருள் பெய்யாயோ?
பேசா மொழியெலாம் பேசாயோ?
உய்யா மல்நான் போவேனோ?
86) உதையா யோநீ காலனையே!

---

85) சங்கப் பலகை—பொற்றுமரைக் குளத்தில் மிதக்கக் கூடியது. நல்ல நூல்களை ஏற்கும். திருக்குறளை அது ஏற்றது.

86) காலன்—எமன்

காலனை வெல்ல வழியுமுண்டோ?
காத்திருந் தேஉயிர் கொள்வன்அவன்
பாலனை உண்ட முதலையிடம்
பாட்டினுல் மீட்ட சுந்தரரும்
ஆளனைத் தீண்டிய அரவொழிய
அவனுயிர் மீட்டிய சம்பந்தர்
வாளர வால்வீழ் உயிர்எழவே
87) வாகீ சரும்பே ரருள்புரிந்தார்

புரிந்ததோர் அற்புதக் கதையாவும்
புராணங்கள் கூறக் கேட்டதனுல்
சரிந்திடும் ஆயுளை நீட்டிடவும்
சங்கடக் காலனை ஓட்டிடவும்
அறிந்ததோர் நல்வழி சரணமதே!
ஆதி பராசக்தி அருள்புரியே!
இரிந்திடக் காலனை ஓட்டிடுக!
88) இணையிலாப் பேரருள் கூட்டிடுக!!

---

87) சுந்தரர் அவிநாசிக் கண்மாயில் முதலை உண்ட பாலனைப்பாடி உயிரோடு மீட்டார். சம்பந்தர் திருமருகலில் அரவுகடித்து இறந்துகிடந்த இளைஞனைப் பாடி உயிர்ப்பித்தார். அப்பூதிநாயனுரின் மகன் மூத்த திருநாவுக்கரசு அரவு தீண்டி உயிர் நீத்திருந்தான். அவன் மீண்டும் உயிர்பெறப் பதிகம்பாடி அருள் புரிந்தார் திருநாவுக்கரசு நாயனுர்.

88) இரிந்திட—விலக
மதுரை மீனுட்சியின் அருளால் காலன் ஓடுவான். ஆயுள் கூடும் என்பதில் ஐயமில்லை.

கூட்டிட வேண்டும் நல்லவரை
குறைத்திட வேண்டும் தீயவரை.
வாட்டிட வேண்டும் வறுமையினை
வதைத்திட வேண்டும் நோயினையே
காட்டிட வேண்டும் நன்மார்க்கம்
களைத்திட வேண்டும் துன்மார்க்கம்
பூட்டிட வேண்டும் பொறுமையினை
89) புதைத்திட வேண்டும் சிறுமையினை.

சிறுமைகள் ஆடும் ஞாலத்தில்
செம்மைகள் ஓடும் காலத்தில்
பொறுமையின் உருவாய் வாழ்ந்திடவே
புகழ்திரு வாசகம் போற்றிடினும்
அருமையை உணர்ந்திடும் ஆளில்லை.
அன்பினை உணர்ந்திடும் நாளில்லை.
ஒருமையாய் உன்திருச் சந்நிதியில்
90) ஒண்டமிழ் பாடிப் பரவிடுவோம்.

---

89) பூட்டிட வேண்டும்—சேர்க்க வேண்டும்

90) இக்காலத்தில் சிறுமைகள் ஆட்டம் போடுகின்றன'
செம்மைகள் ஓடி ஒளிகின்றன.

## பத்தாம் பத்து

பரவிட என்றே நாதந்தாய்.
பாடிட என்றே மொழிதந்தாய்.
கரவிடம் நெஞ்சில் கொண்டதனல்
காற்றிடம் கொண்ட உலகத்தில்
உறவிடம் இன்றித் திரிவோர்கள்
உன்னிடம் வந்தே சேர்ந்தாலும்
துறவிடம் கொள்ளா இதயத்தால்
91) தோற்றிடம் தந்தே துயர்தீர்ப்பாய்.

தீர்த்திட வேண்டும் நோய்நொடிகள்
திளைத்திட வேண்டும் வாழ்துறைகள்
ஆர்த்திட வேண்டும் சன்மார்க்கம்
அழித்திட வேண்டும் ஊழல்எலாம்
பார்த்திட வேண்டும் அறவோரை
பகைத்திட வேண்டும் கரவோரை
ஈர்த்திட வேண்டும் அம்மாஉன்
92) இணையடி காட்டி இசைவிப்பாய்!

இசைத்திட வேண்டும் நல்வாழ்க்கை
இயலிசை நாடகத் தமிழ்த்தாயே!
அசைத்திட வேண்டும் புலனுசை
அடைத்திட வேண்டும் பொருளாசை
தசைத்திற னுலே பொறியின்பம்
தவித்திட வைக்கும் வேளையிலே
திசைத்திறம் எல்லாம் தெரிந்தஅருள்
93) தெய்வமே! காக்கத் துணைவருக!

வருகவே தாயே! மீனுட்சி!!
வளர்கரு ணைத்திறம் கொண்டவளே!
உருகவே உன்னைப் பாடியதும்
உன்திரு வாசலை நாடியதும்
பெருகவே மனநலம் ஓங்கியதால்
பிணிதரும் ஐம்பொறி தூங்கியதால்
அருகவே ஆசைகள் ஓய்ந்திடவே
94) அன்னையே! நின்னருள் தோய்ந்ததுவே!

---

93) தமிழ்த்தாயே—மீனுட்சி

தோய்ந்ததும் நின்திரு வருளாலே
தொடர்ந்ததும் நின்இரு விழியாலே
ஆய்ந்ததும் மறையெலாம் உன்னாலே
அடைந்ததும் நின்னடி தன்னாலே
காய்ந்தது போதும் கடைத்தேற்று
கனிந்தது போதும் முகம்காட்டு.
தேய்ந்தது போதும் தெளிவூட்டு
95) திகைத்தது போதும் வழிகாட்டு.

வழியினைக் காட்ட வேண்டும்அம்மா!
வையையின் நீரில் வளர்பவளே!
பழியினைக் கூட்டி உடம்பாக்கிப்
பகையினைக் கூட்டி நரம்பாக்கி
அழிவினைக் கூட்டி அறிவாக்கி
ஆடிடும் மாந்தர் பொய்ம்மையினை
விழியினைக் காட்டி வேரறுத்து
96) விதியினைக் காட்டும் அருந்துணையே!

துணையே! தென்றல் காற்றுனாய்!
　　தூயோய்! மணலில் ஊற்றுனாய்.
புணையே! வாழ்க்கைப் பொருளானாய்.
　　புனலே! நெஞ்சத் தருளானாய்.
இணையே இல்லா மானிடமாம்
　　ஏற்றப் பிறவி இதயத்தில்
அணையே போட்டுத் தாழாமல்
97) 　　அம்மா! மானுடம் உய்விப்பாய்.

உய்விப் பாய்எனக் கூடுகிறோம்
　　உன்சர விளக்குகள் ஒளிசெய்யப்
பெய்விப் பாய்நல் லருள்மழையை
　　பெருநிலம் ஆண்ட மன்னவர்கள்
செய்வித் தார்பெருங் கோபுரங்கள்!
　　செந்தமிழ் ஆண்ட பாவலர்கள்
பெய்வித் தார்அருட் பாமழைகள்!
98) 　　பிறந்தனை மதுரையில் தமிழாடி!!

---

97) புணை—தெப்பம் 　　புனல்—நீர்
உய்விப்பாய்—வாழ்விப்பாய்.

98) தமிழாடி—தமிழில் நீராடியவள் மீனாட்சி.
தமிழுக்குக் கண்ணாடி மீனாட்சி.

ஆடியும் ஆவணி சித்திரையும்
அழகிய மாசியும் வீதிகளாய்க்
கூடிய மாமது ரைத்தேவி!
கோபுரம் வான்முகில் தோய்ந்தவளே!
ஆடிய திருவிளை யாடலினுல்
ஆலவாய் மண்ணில் அமர்ந்தவளே!
பாடிய தெழுகடல் உன்முன்னே!
99) பாற்கடல் அபிஷேகம் கண்முன்னே!!

கண்முன் னேதினம் விழாக்கோலம்
காண வருபவர் பலகோடி
பெண்முன் னேசிவம் அடக்கமெனப்
பேச வந்த அருட்சக்தி!
உன்முன் னேதினம் சந்நிதியில்
ஒண்டமிழ் பாடிப் பரவுகிறோம்.
பண்முன் னேநீ வந்திடுக!
100) பார்த்தால் அன்றிப் பசியாரா!!

---

99) ஆலவாய்—மதுரை மீனுட்சிஅம்மன் கோயிலுக்கு ஆலவாய் என்று பெயர்.

எழுகடல்—மதுரையில் உள்ளது.

# பாட்டு முதற் குறிப்பு அகராதி

| பாட்டு எண் | வார்த்தை | பாட்டு எண் | வார்த்தை |
|---|---|---|---|
| 51 | உயிரை | 76 | இதுவும் |
| 52 | உண்டோ | 77 | விட்டவளே |
| 53 | கிளம்ப | 78 | சரிதாஞ |
| 54 | ஏலா | 79 | முடியா |
| 55 | என்றே | 80 | பாலூட்டி |
| 56 | அம்மம்மா | 81 | தந்திடு |
| 57 | நீதி | 82 | வாழ்வினை |
| 58 | தொழுகின்றேன் | 83 | சதமானேன் |
| 59 | நீதான் | 84 | காப்பாற்றம்மா |
| 60 | செய்தவளே | 85 | வைத்ததும் |
| 61 | வழியினை | 86 | கையாலே |
| 62 | நாகமாய் | 87 | காலனை |
| 63 | நெஞ்சமே | 88 | புரிந்தோர் |
| 64 | தெரியா | 89 | கூட்டிட |
| 65 | பேசா | 90 | சிறுமைகள் |
| 66 | மீளா | 91 | பரவிட |
| 67 | வளரா | 92 | தீர்த்திட |
| 68 | மறப்பேன் | 93 | இசைத்திட |
| 69 | வருவாய் | 94 | வருகவே |
| 70 | கண்ணே | 95 | தோய்ந்ததும் |
| 71 | யாரை | 96 | வழியினை |
| 72 | ஆகின் | 97 | துணையே |
| 73 | உண்டா | 98 | உய்விப்பாய் |
| 74 | சோர்கின்றேன் | 99 | ஆடியும் |
| 75 | அடைய | 100 | கண்முன்னே |

